Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 321

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM–631503.

வருஷச் சந்தா ரூ. 10.    ஜீவியச் சந்தா ரூ. 100

---

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975௵ பங்குனிமீ

# பங்குனி விசாகோத்ஸவச் சிறப்புகள்

(தி. அ. அனந்தாழ்வான்)

"உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்!" என்றருளிச் செய்கின்றார் மணவாளமாமுனிகள். அல்பச்ருதர் கலக்கின ச்ருதி நன்ஞானத்துறை சேர்ந்து தெளிவுற்று ஆழ்பொருளை யறிவித்தது நம்மாழ்வார் திருவவதாரத்தினால். எனவே அவ்வாழ்வார் அவதரித்த வைகாசி விசாகத்திற்கு ஒப்பொருநாளுண்டோ? என்றருளினர் பொய்யிலாத மணவாளமாமுனிகள். ஆனால் அதனையொத்த மற்றொரு நன்னாள் மெய்யடியார் தம் நெஞ்சில் தேனூறி யெப்பொழுதும் தித்தித்திருக்கக் காண்கின்றோம். அதுதான் பங்குனி விசாக நன்னாள். என்னே! மறையும் மாறன் பசுந்தமிழும் மற்றையாழ்வார் தம் நற்கலையும் மாநிலாக் குரவர் தம் ஸ்ரீ மொழியும் காசினியில் விளங்கிட நம் அண்ணாஸ்வாமி வந்து தோன்றிய பங்குனி விசாகம் வைகாசி விசாகத்தை ஒக்குமெனின் அஃது ஆன்றோர்தமக்கு உடன்பாடே யென்க. எனவே ஒவ்வோராண்டும் பங்குனி விசாகத்தை எதிர்நோக்கி நிற்கும் அடியார்குழாம்.

இவ்வாண்டு தைமாதத்திலிருந்து நமது ஸ்வாமியின் திருமேனியின் போக்கினைக் கண்டார்க்கு மீனவிசாக மஹோத்ஸவம் எவ்வாறு நடைபெறுமென்னும் கவலை யுண்டாகியிருந்தது. அக்கவலை நீங்கும்வண்ணம் இம் மஹோத்ஸவம் விசேஷ வைபவத்துடன் நடைபெற்றதில் பேருவகை எய்தாதார் இலர். மற்றையோர்க்கு லௌகிக மருந்துகள் தரும் பலத்தை—அதனின் விஞ்சிய பலத்தை—நமது ஸ்வாமி அருளிச்செயல் அருள் செய்தலை ஸ்வாமியுடன் சிறிது பழக்கமுடையாரும் அறிவர். அதனை மெய்ப்பித்தது இவ்வாண்டின் நிகழ்ச்சி. தைமாதம் முதலிலேயே வேத பாராயணம் (சுருக்கமாக) இருநாட்கள் நடைபெற்றது. தையில் மகம் தொடங்கி திருவாய்மொழியும் அரையர்கள் ஸேவிக்கும் முறையில் ஸேவிக்கப்பட்டது. அப்போது "உலகமுண்ட பெருவாயா" சாற்றுமுறைக்கு ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை பெரிய ஜீயர்ஸ்வாமி எழுந்தருளி மங்களாசாஸனம் செய்தருளியது குறிப்பிடத் தக்கது. திருவரங்கத் திருப்புன்னை திருவாய்மொழியால் வளர்க்கப்பட்டது என்றருளிச்செய்வர் பட்டர். நம் ஸ்வாமிக்கும் அருளிச்செயலே ஜீவாது. எனவே அதனையே முற்றப்பருக விரும்பி இவ்வருஷம் இருபத்தெட்டு நாட்கள் மீன விசாக நிகழ்ச்சிகள் நடைபெற ஸங்கல்பித்தருளினர்.

சில வருஷங்களில் பங்குனி மாதத்தில் இரண்டு விசாகங்கள் வருவதுண்டு. அதுபோது முதல் விசாகந் தொடங்கி இரண்டாம் விசாகம் வரை (28 நாட்கள்) திருநக்ஷத்ரோத்ஸவம் பரிபாலிக்கப்பட்டு வரும். இவ்வருஷத்துப் பங்குனி மாதத்திற்கு அந்த பாக்யம் கிடைக்கவில்லை. ஆனால் மார்சு மாதம் அப்பெரும்பேறுடையதாயிற்று. அதாவது மார்ச் மூன்றாம் தேதி ஒரு திருவிசாகமும் முப்பதாம் தேதி ஒரு திருவிசாகமும் வந்ததால் இவ்விருபத்தெட்டு நாட்களும் கோஷ்டி நடைபெற்றது. 3-3-75 தொடங்கி தினமும் மாலை வேளைகளில் 7-30 முதல் ஏறக்குறைய ஒன்றரை

(இதன் தொடர்ச்சி ராப்பர் 3-ம் பக்கம் பார்க்கவும்.)

# ஸ்ரீ ராமாநுஜன்–321



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 27 | ஆனந்தஸ பங்குனி 10—4—75 | ஸஞ்சிகை 9


## அடியேனுடைய பங்குனி விசாக விருந்து

இந்த ஸம்வத்ஸரம் அடியேனுடைய ஜன்மநக்ஷத்திரக்கொண்டாட்டத்தை மாசிவிசாகத்திலிருந்து பங்குனிவிசாகம் வரையில் இருபத்தெட்டு நாள் அன்பர்களும் ஆப்தர்களும் வெகுசிறப்பாக நடத்திவைத்தார்கள். அந்தச்சிறப்புக்களைப் பற்றிச் சிரஞ்சீவி தௌஹித்ரன். அனந்தாழ்வான் எழுதுவன். எனக்கே நேராக எழுத ஆசையுண்டு. ஆயினும் இதன் கீழ்வருங்கட்டுரையை எழுதவேணுமென்கிற உத்ஸாஹத்தினுல் தேஹ அநாரோக்யப்ரயுக்தமான அசக்தி மிகுதியினுல் இதை மட்டும் ஸ்வஹஸ்தலிகிதமாக்குகிறேன். ... ... ...

## பல பெரியார்களின் பெருமை

நிகழும் ஆனந்த ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் அடியேனுடைய எண்பத்துநான்கு பிராயப்பூர்த்தியை முன்னிட்டு, பெரும்பாலும் உலகம் மதிக்கத் தகுந்தவர்களாயிருந்து, அடியேனுல் நெருங்கிப்பழகி அநுபவிக்கப்பட்டவர்களான (பெரும்பாலும் வைகுண்டவாஸிகளான) நாநாதேசங்களைச் சேர்ந்த பல பெரியார்களை ப்ரஸ்தாவித்து அவர்களின் ப்ரபாவங்களைச் சுருங்க வெளியிட உத்தேசித்து இது எழுதத் தொடங்குகிறேன்.

பர்த்ருஹரி ஸுபாஷிதத்தில் அடியேன் அடிக்கடி சிந்திக்கும் ஸுபாஷிதம் ஒன்றுண்டு—''பரிவர்த்திநி ஸம்ஸாரே ம்ருத: கோ வா ந ஜாயதே, ஸ ஜாதோ யேந ஜாதேந யாதி வம்ச: ஸமுந்நதிம்'' என்பது. அநாதியான இந்த ஸம்ஸாரத்தில் பிறப்பவர்களும் இறப்பவர்களும் எண்ணிலடங்கார்; பிறந்தவர்களெல்லாரும்

பிறந்தவர்களல்லர்; எவர் பிறந்ததனால் ஒரு பெருங்கூட்டம் மேன்மையடைகின்றதோ அவரே பிறந்தவராவர்—என்பது இதன் கருத்து. இங்ஙனே பிறந்தவர்கள் அடியேனுக்குத் தெரிந்து நாற்றிசையிலும் எண்ணிறந்தவர்களுள்ளார்கள். "வைத்தநாள்வரை எல்லை குறுகிச்சென்று" என்கிற ஆழ்வார் பாசுரம் அடிக்கடி நினைவுக்கு வருகின்றது. ஆயுச்சேஷமும் இங்ஙனே பெரியார்களின் குணநுபவத்திலேயே கழியவேணுமென்று பேரருளாளனை ப்ரார்த்தித்துக்கொள்கிறேன்.

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி: முதன்முதலாக அடியேனுடைய திருத்தகப்பனாரைப்பற்றி விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீரங்கநாத சர்மந்கொண்டவர். அண்ணங்காசாரியரென்றே வழங்கும் திருநாமம். நாற்பத்துமூன்று ஸம்வத்ஸரமே இவ்விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தார். குரோதி ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் திருநாடலங்கரித்தார். அடியேனுடைய பதினான்காவது பிராயம் முடிந்த ஏழாநாளில் பரமபதித்தபடி. அவரோடு நெருங்கிப் பழகினவர்களும் அவரிடத்தில் கல்வி பயின்றவர்களும் பத்தெட்டு ஸம்வத்ஸரங்களுக்கு முன்புவரையில் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் இப்போது வாழ்வதாக ஒருவரும் நினைவுக்கு வரவில்லை. அவருடைய திருவுருவப்படமும் சேகரிக்கப்படவில்லை. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் ஸம்ஸ்க்ருத பாடசாலையொன்று பிரபலமாக நடந்துகொண்டிருந்தது. அதில் (திருத்தகப்பனார்)ஸாஹித்யத்திற்கும்திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தார். அப்பாடசாலையில் நூற்றைம்பது வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள். காலை 10 மணிக்கும் மாலை 5 மணிக்கும் பாடசாலை விடும்போது மாடவீதிக்குத் திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் மேற்கே திருப்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் சாணப்படுவர்கள். ஸ்கூல் என்று சொல்லக்கூடிய பள்ளிக்கூடம் அப்போது சின்னகாஞ்சியிலோ பெரிய காஞ்சியிலோ ஒன்றுகூட ஏற்பட்டிருக்கவில்லை. அதனால்தான் அப்போது ஸம்ஸ்க்ருத வித்யா பாட ப்ரவசனங்கள் குறையற நடந்து வந்தன.

அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் மஹாபாஷ்யாந்த பண்டிதரென்று ஒரு பிரபல பண்டிதர் வந்திருந்தார். (எழுபத்துமூன்று வருஷத்திற்கு முந்திய கதையிது.) அவரோடு நாலைந்து நிமிஷம் பேசினவாறே அவருடைய பாண்டித்ய ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்ட திருத்தகப்பனார் 'சப்தமஞ்ஜரியில் ஒரு ஸந்தேஹம்' என்று கேட்கத் தொடங்கினார். 'சுசி சப்தம், ம்ருது சப்தம், கர்த்ரு சப்தம் ......இவற்றை சப்தமஞ்ஜரியில் நபும்ஸகலிங்கமாகவே யெடுத்துக்காட்டியிருக்கிறதே, இவை பும்லிங்க ஸ்த்ரீலிங்கங்களில் கிடையாதோ? கர்த்தா—கர்த்ரீ என்றும், ம்ருது: — ம்ருத்வீ என்றும் பிரயோகங்கள் காண்கிறோமே; அப்படியிருக்க நபும்ஸகலிங்கத்தில் மட்டுமே கர்த்ரு, கர்த்ருணீ...என்று காட்டியிருக்கிறதே; மற்றவை விட்டுப்போயிற்று என்ன? அல்லது இதர லிங்கங்களில் பிரயோகிப்பது தவறு?" என்று கேட்டார். அதற்கு அவர் சொல்லுகிறார்—'சப்தமஞ்ஜரி ஏழெட்டு வயதில் வாசித்தது; வாசித்ததாகக்கூட ஞாபகமில்லை. அதில் இப்போது கேட்டால் அடியேன் என்ன சொல்லுவது? மஹாபாஷ்யத்தில் ஏதாவது கேட்டால் சொல்லுகிறேன்' என்றார். எழுந்தருள வேணுமென்று சொல்லியனுப்பிவிட்டார். இத்

தகைய கேள்விகளை இக்காலத்துப் பிரபல பண்டிதர்களிடத்திலும் தாராளமாகக் கேட்கலாம். கேட்டவுடனே தூக்கியெறிந்தாற்போல் விடைகூறவல்ல மேதாவி வித்வான்கள் இல்லாமற்போகவில்லை. அன்னவர்களைத் தேடிப்பிடிக்க வேண்டும். "ஸஹஸ்ரேஷு கச்சித்" என்றாப்போலவே தேறுவர்களத்தனை. மற்றையோர்களுக்கு இந்த ப்ரஸ்தாவமே புரியாது.

இப்படிப்பட்ட பரீக்ஷைகளைத் திருத்தகப்பனார் பெரிய வித்வான்களிடம் செய்துவிட்டு...அவர்கள் சென்ற பிறகு அந்த விஷயமருமங்களை அடியேனுக்கும் ஸஹபாடிகளுக்கும் லகுவாக உணர்த்தியருள்வர். "தே ஹி நோ திவஸா கதா:" என்று கண்ணீர்ப்பெருக்குடன் நிற்கிறேன். ஆயிரம் பக்கமெழுதினாலும் ஆராது.

<u>ஸ்ரீமத்பரமஹம்ஸ-அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி.</u> தேவப்பெருமாளது கீழண்டை கோபுர வாசலில் விளங்கும் அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடத்தில் 1916-ஆம் வருடத்திற்கு முன்பு நாற்பது ஸம்வத்ஸர காலம் ஆஸ்தானமலங்கரித்து விளங்கின ஜகத்ப்ரஸித்த மடாதிபதி ஜீயர்ஸ்வாமி ஷஷ்டி ஜீயர்ஸ்வாமியென்று வழங்கப்பட்டு வந்தார். சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்து திருவம்சத்தில் அவதரித்ததனால் ஷஷ்டியார் என்று குடும்பப் பெயராக வழங்குவது. அந்தரீதியில் ஷஷ்டி ஜீயர்ஸ்வாமியென்றே இந்த ஜீயர்ஸ்வாமி ப்ரஸித்தி பெற்றிருந்தார். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் அடியேனுக்கு ஸாக்ஷாத்மாதாமஹராவர். இவர் பூர்வாச்ரமத்தில் ஷஷ்டி வரதாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் தென்மொழியும் வடமொழியும் திகழ்ந்த நாவரராய் விசேஷித்துத் தமிழ்ப் புலவர் திரளில் ப்ரதம பரிகணிதராய் விளங்கிவந்தார். ஸ்ரீகாஞ்சீ சடகோப நிலைய பாடசாலையில் ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமி காலத்தில் தமிழிலக்கண விலக்கியங்களுக்கு உபாத்யாயபதவியை அலங்கரித்துவந்தார். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீவை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமியைப்பற்றிக் கேள்விப்படாதாரில்ர். அந்த ஸ்வாமி ஸ்ரீ உ. வே. புன்னை சீமாச்சார்ஸ்வாமி யென்பவருடைய மாணாக்கர். அந்த சீமாச்சார் ஸ்வாமி ப்ரக்ருதஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலேயே (பூர்வாச்ரமத்தில்) மாணாக்கராக வாழ்ந்து தேர்ச்சி பெற்றார். ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரமான பிறகும் அதற்கு முன்பும் ஸன்னிதி வீதியில் விக்க்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை. ஈச்சம்பாடி நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் உபயவேதாந்த ரஹஸ்யக்ரந்தங்களை வரியடைவே அதிகரித்துப் பல நூற்றுவர்க்குப் பிரவசனம் செய்தருளின பெருமை ஸ்ரீ ஸ்வாமிக்கே அஸாதாரணமாக அமைந்திருந்தது. தென்னாட்டில் விளங்கின—விளங்குகின்ற மடாதிபதிகளுக்குள் ஸ்ரீ ஸ்வாமியைப்போல் ப்ரவசனம்செய்த மஹான்கள் வேறில்லையென்று சொல்லலாம். அடியேனுக்கு ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதியிலேயே ரஹஸ்ய க்ரந்தங்களும் அருளிச்செயல் வியாக்கியானங்கள் பூர்த்தியாகவும் ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. இளமையிலேயே அஷ்டப்ரபந்தம், கம்பராமாயணம், நன்னூல் முதலிய இலக்கண நூல்கள் இவற்றைப் பாடமாகக் கற்பித்தருளினார்.

<u>ஸ்ரீமதுபயவே. ஜகத்குரு காதிஸ்வாமி.</u> "ஸ்ரீமுககும்பஸ்வாதீஜாதமநந்தார்ய ஸூரிமஹமீடே, ஸ்ரீக்ருஷ்ணஸூரிதநயம் வாதிபயங்கரகுலாப்தி சந்த்ர

மஸம்.'' என்கிற நித்யாநுஸந்தேய திருநக்ஷத்திரத் தனியன்படி ஸ்ரீமுகஸம்வத்ஸரம் மாசிமாதம் ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் இந்த விபூதியில் வந்து தோன்றி அறுபத்திரண்டு ஸம்வத்ஸரம் வாழ்ந்தருளி ஸ்ரீ ஸ்வாமி செய்தருளின அதிமாநுஷக்ருத்யங்கள் அவாங்மனஸகோசரமென்று ஒரே வார்த்தையில் தலைக்கட்டத்தக்கது. ஆயினும் ஸ்வல்பமே விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீ காஞ்சியில் ஸன்னிதிவீதியில் வடவண்டை வாடையில் ஸ்ரீ ஸுதர்சனாழ்வானுடைய ரக்ஷைபெற்ற மிகப்பெரிய திருமாளிகை 'காதி அநந்தாசாரியர் திருமாளிகை' என்றும் 'காரணையநந்தாசார் திருமாளிகை' என்றும் ப்ரஸித்திபெற்றது. இந்த ஸ்வாமியின் முன்னோர்கள் காரணையென்னும் அக்ரஹாரத்தில் வாழ்ந்துவந்ததனால், ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்குமுன்புவாழ்ந்தவரும், முதன்முதலாகவடதேசங்களுக்கெழுந்தருளி சிஷ்யஸம்பத்தைப் பெற்றவரும், புஷ்கர க்ஷேத்ரத்தில் விக்ரஹப்ரதிஷ்டை பெற்றிருப்பவருமான பெரிய அனந்தாசார்யஸ்வாமிக்கு 'காரணை அனந்தாசாரியர்' என்கிற ப்ரஸித்தியிருந்துவந்தது. அந்த மஹாஸ்வாமியின் ஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த காதிஸ்வாமி இளமையில் அடியேனுடைய திருத்தகப்பனாரிடம் சில வருஷங்கள் கல்வி பயின்று, திருப்பதியில் எழுந்தருளியிருந்த ஜகத்விக்யாத வித்வத்ஸார்வபௌமரும் தமக்கு ஸாக்ஷாந்மாதுலருமான ஸ்ரீமத் திருமலை அனந்தாண் பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி திருவடிவாரத்தில் சென்று சேர்ந்து பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் அங்கேயே குடி வாழ்ந்து ஸகல சாஸ்த்ர பாரங்கதராய் தீபாதுத்பந்நப்ரதீபமாய் விளங்கினர்.

சிஷ்யாநுக்ரஹார்த்தமாக வடநாட்டில் பலகால் ஸஞ்சாரம் செய்தருளி, காசியில் வித்வான்களை வென்று விசிஷ்டாத்வைத விஜயஸ்தம்பம் நாட்டி பாம்பே மகாநகரத்தில் பனஸவாடியில் திருவேங்கடமுடையான் ஸன்னிதியை அத்யத்புதமாக ப்ரதிஷ்டிப்பித்து, மற்றும் மார்வாடத்தில் ரோல் முதலான விடங்களிலும் ஆலய ஸ்தாபனங்கள் செய்தருளின பெருமை இந்த ஸ்வாமிக்கு அநிதரஸாதாரணமானது. காஞ்சியில் தமது திருமாளிகையின் பக்கத்திலேயே ஸ்ரீஸுதர்சநமுத்ராக்ஷரசாலை யென்று ஜகத்ப்ரஸித்தமான அச்சுக்கூடமொன்று ஸ்தாபித்து அதில் சதுச்சாஸ்த்ரக்ரந்தங்களையும் சில பாஞ்சராத்ரஸம்ஹிதைகளையும் நியாய பாஸ்கரத்தையும் மற்றுஞ்சில (மைஸூர்) அனந்தாழ்வான் வாதக்ரந்தங்களையும் பிரசுரித்த பெருமையும் ஸ்ரீஸ்வாமிக்கே அஸாதாரணமானது. ஸாதாரணரீதியிலிருந்த திருமாளிகையை லக்ஷம் ரூபாய் செலவில் உத்தரிப்பித்தருளினர். தம் திருத்தகப்பனார் ஏறியருளப்பண்ணின (அஸ்மத்குலகூடஸ்தரான) ப்ரதிவாதிபயங்கராசாரியருடைய ஸன்னிதியை ப்ராகார கோபுர மண்டபாதி நிர்மாணங்களினால் விசேஷமாக உத்தரிப்பித்தருளினர்.

அடியேன் ஒரு வஸ்துவாக ஆகப்பெற்றது ஸ்ரீஸ்வாமியின் பரம கருணைக்கு இலக்காகப் பெற்றதனாலேயே. திருத்தகப்பனார் திருநாட்டுக்கெழுந்தருளினபோது ஸ்ரீஸ்வாமி மார்வாடத்தில் சிஷ்யஸஞ்சாரத்தில் எழுந்தருளியிருந்து, பிறகு நாலாறு மாதத்தில் காஞ்சி சேர்ந்தருளினது முதலாகப் பெரும்பாலும் ஸ்வாமி திருவடிவாரத்திலேயே வாழ்ந்திருந்தேன். சிலசில ஸமயங்களில் வடநாட்டு யாத்திரையிலும் அநுசரணை அந்வயிக்கப் பெற்றேன், அடியேனுடைய பத்தாவது வயதில்

ஸ்வாமி மஞ்ஜுபாஷிணீ என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையை ப்ரசுரிக்கத் தொடங்கினார். அது இரண்டு வருஷம் மாஸிகமாகவும், மூன்று வருஷம் பாக்ஷிகமாகவும் நடந்து வந்து ஆறாவது ஸம்வத்ஸரம் முதலாக ஸாப்தாஹிகமாய் [வாரந்தோறும்] நடந்துவர ஆரம்பித்தது. அடியேனுடைய பதினாறு பதினேழு வயதில் அந்த பத்ரிகையின் ஸம்பாதன துரந்தரத்வத்தை அடியேனுக்கு அதீனமாக்கியருளி "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்ற ஆழ்வாரருளிச்செயலின் படி அடியேனைத் திருத்திப் பணிகொண்ட வகைகள் வாசாமகோசரம் ஸ்ரீ ஸ்வாமியின் அத்விதீயரான திருக்குமாரர் பிதுச்சதகுணராய் விளங்கி வருகிறார். இவருடைய திருக்குமாரர்கள் மூவரில் முதல்வர் நியாயவேதாந்த நிபுணராய் வாக்மியாய் விளங்கி வருகிறார்.

ஸ்ரீமதுபயவே. திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி. திருப்பதியில் ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி என்று தென்னாடுகளில் வடநாடு ஸுப்ரஸித்தராயிருந்த மஹாவித்வத் ஸார்வபௌமர் எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி பரமபதித்து இன்றைக்கு 50 வருஷமாகிறது. இவர் பக்கலில் ஜ்ஞானஸம்பத்தோடுகூட அநுஷ்டானஸம்பத்தும் அதிசயிதமாக விளங்கிற்று. சதுச்சாஸ்த்ரபாண்டித்யத்தோடுகூட மற்றும் அநேக கலைகளிலும் பாண்டித்யம் ப்ரசுரமாயிருந்தது. பிற்காலத்தில் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியோடொப்ப ப்ரஸித்த வித்வான்களாக விளங்கின ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர், ஸ்ரீமத் கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி முதலானோரும் இந்த ஸ்வாமி பக்கலிலேயே நெடுங்காலம் வித்யார்த்திகளாக வாழ்ந்தவர்கள். திருப்பதியில் இப்போது பிரபலமாக விளங்கிவருகின்ற வித்யாசாலையானது முந்துறமுன்னம் இந்த ஸ்வாமியினால் ஸாமான்யமாகத் தொடங்கப்பட்டதாம். இந்த ஸ்வாமியின் காலத்திலேயே அது ப்ராபல்யமடைந்து விட்டது.

இந்தஸ்வாமி வடநாட்டில் திக்விஜய யாத்திரைகள் பலகால் செய்தருளினவர். பாடலீபுத்ரஸபையென்று நாளைக்கும் ப்ரஸித்தமாக வழங்கப்பட்டு வருகிறது. அதாவது பாட்னாவில் சைவவைஷ்ணவக் கிளர்ச்சிகள் த்வைதாத்வைதக் கிளர்ச்சிகள் பிரபலமாக நேர்ந்தபோது இந்தஸ்வாமியை அந்நாட்டுப் பிரமுகர்கள் வரவழைத்து மாதக்கணக்கில் வாக்யார்த்த சர்ச்சைகளை நடத்திவைத்தார்களென்றும், அப்போது ஸ்ரீஸ்வாமி அத்விதீயராக வாதங்கள் செய்து வெற்றி பெற்றாரென்றும் புஸ்தகாரூடமாய் விளங்குகின்றது. திருச்சுகனூரில் விக்ரஹம். தேசிகாசார்யரென்பவரிடத்தில் ஸாமாந்யசாஸ்த்ரங்களதிகரித்தார். ஸ்வாமிக்கு ஸ்ரீகாஞ்சீப்ராந்தத்து அக்ரஹாரங்களில் வம்சபரம்பராப்ராப்தர்களான சிஷ்யர்கள் பலருளர். வடநாட்டில் ஸ்வாமியின் அப்ரதிமப்ரபாவத்தைக் கண்டு திருவிலச்சினை பெற்று சிஷ்யர்களானார் பலர். ஸ்ரீஸ்வாமியருளிச்செய்த திவ்யக்ரந்தங்கள் பலதுறைகளில் அமைந்து தேவநாகரலிபியிலும் தெலுங்குலிபியிலும் அச்சிடப்பட்டுள்ளன. ஸ்ரீஸ்வாமியோடு அடியேனுக்கு இரண்டு வகையான தேஹஸம்பந்த பாக்யம் அமைந்திருந்தது. அடியேனுடைய பித்ருவ்யர் ஸ்ரீஸ்வாமியின் ஸாக்ஷாத் ஜ்யேஷ்டஜாமாதா. அந்த பித்ருவ்யர் திருப்பதிக்கு ஸ்வீக்ருதராய் 'திருப்பதி அண்ணா' என்றே ப்ரஸித்திபெற்

றிருந்தார். மற்றொரு ஸம்பந்தமாவது, ஸ்ரீஸ்வாமியின் ஜ்யேஷ்டஸஹோதரருடைய பௌத்ரர்க்கு அடியேனுடைய தங்கை வாழ்க்கைப் பட்டவள்.

புரிசைஸ்வாமியின் மூத்தஸஹோதரர் ஸ்ரீ பங்காராசாரியர் என்று ப்ரஸித்தி பெற்று ந்யாய வேதாந்தங்களில் மிகச்சிறந்த வித்வானாக விளங்கிவந்தார். இந்த ஸ்வாமி குமாரருக்கு மூன்று திருக்குமாரர்கள். மூவருடைய ஸந்தானங்களும் விளங்கிவருகிறார்கள்.

புரிசைஸ்வாமியின் (ஸர்வ) ஜ்யேஷ்ட்டப்ராதா அநந்தாசார்யஸ்வாமியின் திருக்குமாரர் அண்ணா என்பவர் அதிபால்யத்திலேயே ந்யாய வேதாந்தங்களில் அப்ரதிம வித்வானாகப் புகழ்பெற்று இளமையிலேயே மறைந்தார். அக்காலத்தில் கிடாம்பி அப்பா அண்ணங்கராசாரியர் ஸ்வாமியென்று ஒரு ப்ரக்யாத பண்டிதர் எழுந்தருளியிருந்தார். அவரும் ஸ்ரீகாதிஸ்வாமிக்கு ஒரு மாதுலர். அவர் ஸதாசார சீலர் என்று ப்ரக்யாதி பெற்றவர். வ்யாகரண வேதாந்தங்களில் சிறந்த பண்டிதரென்று புகழ் பெற்றவர். இப்படிப்பட்ட மஹான்களை அடியேன் ஏழாவது வயது முதல் முப்பதாவது வயது வரையில் நெருங்கி அனுபவித்தபடியால் அவர்களை அடிக்கடி நினைக்கிறேன்.

புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் தௌஹித்ரர் இந்தோர் ப்ரதிவாதி பயங்கரம் அநந்தாசார்யர் என்பவர் மாதாமஹரிடம் ஸகல சாஸ்திரங்களிலும் வல்லமை பெற்று பால்யத்திலேயே பரமபதித்துவிட்டார். அவருடைய தௌஹித்ர ஸந்ததி விளங்கி வருகிறது.

புரிசை ஸ்வாமியின் திருத்தப்பி குட்டிஸ்வாமி என்று ப்ரஸித்தரான வெங்கடாசார்யர் ஸ்வாமி ஸகல சாஸ்த்ரங்களிலும் அப்ரதிமவித்வானாக எழுந்தருளியிருந்து பம்பாய் கேமராஜ்ஸேட்டின் அச்சுகாரியாலயத்தில் நமது ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான புத்தகங்களை அச்சிடுவித்தார்.

## திருப்பதி பிரதிவாதிபயங்கர குடும்பம்

திருப்பதிப்ரஸ்தாவம் வந்தபடியால் சில விஷயங்கள் விஜ்ஞாபிக்கிறேன். அடியேனுக்குப் பிதாமஹர்கள் ஐவர். இருவர் காஞ்சியிலேயே எழுந்தருளியிருந்தார். ஒருவர் ப்ரஹ்மசாரியாகவே இருந்துவிட்டார். மற்றிருவர்கள் திருப்பதியில்வாழ்ந்த இரண்டு ப்ரதிவாதிபயங்கர திருமாளிகைகளுக்கு ஸ்வீகாரமாய்ச்சென்றனர். அவர்கள் இருவர்க்கும் முறையே ஐவரும் நால்வரும் திருக்குமாரர்கள் அவதரித்தார்கள் ஐவருள் பெரியவரான அண்ணா ஸ்ரீரங்காசாரிய ஸ்வாமியென்பவர் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமிக்கு ஸாக்ஷாத் ஜாமாதா அவருக்கும் ஔரஸ ஸந்ததி யில்லாமல் ஸ்வீகார குமாரனே உள்ளான். அவருடைய திருத்தம்பியார் அண்ணங்கராசாரியர். அவருக்குப் புத்ரஸந்ததியில்லை. தௌஹித்ரர்களிருவர்—தி. அ. குன்னபாக்கம் க்ருஷ்ணமாசாரியும், கோபாலாசாரியும்—இவர்கள் இருவரும் வித்வான்களாயும் சிரோமணிகளாகவும் அந்தத்திருமாளிகையிலேயே விளங்கி வருகிறார்கள். மற்றையவர்களுடைய ஸந்ததியும் ஒருவாறு விளங்கி வருகின்றது. மற்றொரு திருமாளிகைக்குச் சேர்ந்த நால்வரின் ஸந்ததியும் லௌகிக வ்ருத்தியில் விளங்கி வருகிறார்கள்.

ஸ்ரீமத். புரிசை தி. அ. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமீ: ஸ்ரீகாஞ்சி ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசாரிய ஸ்வாமியின் ஜநக குலத்திலே அவர்க்கு கநிஷ்ட ஸஹோதரராகத் தோன்றின இந்த ஸ்வாமி திருத்தமையனாருடன்கூடவே அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் காவ்யநாடகாலங்காரங்கள் பயின்று, ஸ்ரீமத்குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் ந்யாயவேதாந்தங்களையும் ஸ்வரூபக்ரந்தங்களையும் பரிபூர்ணமாக அதிகரித்து ப்ரபல வித்வானாக விளங்கினார். திருமலைதிருப்பதிதேவஸ்தான கலாசாலையில் பல வருஷங்கள் சாஸ்த்ரோபாத்யாயராக விளங்கிப் பல தேசத்தவர்களைப் பண்டிதமணிகளாக்கினர். அங்கு விச்ராந்தி பெற்றபின்பு திருவல்லிக்கேணியிலும் மாம்பலத்திலும் வாழ்ந்து ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசநநிரதராய் எழுந்தருளியிருந்தார். இவருடைய குமாரர்கள் லௌகிகோத்யோகத்தில் ப்ரதிஷ்டிதர்களாக விளங்கி வருகிறார்கள்.

ஸ்ரீமத். சிங்கம்பூண்டி தி. அ. வரதாசார்யர் ஸ்வாமி—இவர் காஞ்சீபுரியைச் சேர்ந்தவர். ஸாஹித்யவ்யாகரண ப்ரவீணர். திருப்பதி கலாசாலையில் பல வருஷங்கள் உபாத்யாயராய் இருந்தார்.

ஸ்ரீமத் தாமல் திருவேங்கடாசாரியர்: தாமல் குட்டிஸ்வாமியென்று வழங்கப்பட்டுவந்தவிவர் திருமலை திருப்பதி வித்வத் ஸார்வபௌம—ஸ்ரீமத் தி. அ. புரிசை மஹாஸ்வாமி யெழுந்தருளியிருந்த வரையில் அந்த ஸ்வாமியின் திருவடிவாரத்திலேயே வாழ்ந்திருந்து ந்யாயவேதாந்த ஸம்பிரதாய க்ரந்தங்களையெல்லாம் அதிகரித்து, பிறகு இருபது வருஷம் காஞ்சியில் வாழ்ந்து திருநாடலங்கரித்தார்.

---

மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யர்ஸ்வாமி. இந்த மஹாபுருஷர் திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பது ஸம்வத்ஸரமாகிறது. உலகத்தில் மிகவும் ப்ரஸித்தமாக வழங்கிவருகின்ற 'ந பூதோ ந பவிஷ்யதி' என்கிற வாக்கானது இந்த ஸ்வாமி ஒருவருக்கே தகும். உலகத்தில் மற்ற மஹான்கள் ஸம்பாதிக்கும் யோக்யதைகள் மற்றும் பலரிடத்தும் காணக்கூடியவையேயாகும். இந்த ஸ்வாமி ஸம்பாதித்திருந்த யோக்யதைகள் முக்காலத்திலும் அநிதரஸாதாரணமென்பதை விஜ்ஞாபிப்பதற்கும் அடியேன் அநர்ஹன். தென்னாடு முழுவதிலும் இவருடைய யோக்யதைகள் நன்கு பரவியிருப்பதால் அடியேன் எடுத்துரைப்பது பிஷ்டபேஷணமேயாகும். வேதத்திலும், ஆழ்வாரருளிச் செயல்களிலும், ஆசார்ய திவ்யஸூக்திகளிலும், இதிஹாஸ புராணங்களிலும், காவ்ய நாடகாலங்காரங்களிலும் இந்த ஸ்வாமி பரிச்ரமப்பட்டு ஸம்பாதித்திருந்த யோக்யதை ஒருவர்க்கும் ஒரு புருஷாயுஸ்ஸில் ஸம்பாதிக்கக் கூடியவையல்ல என்பது ஸத்யம். இந்த ஸ்வாமி பெரும்பாலும் வித்யாக்ரஹணம் செய்தது ஸ்ரீபெரும்பூதூரில். திவ்யதேச வாஸத்தையே பரமபுருஷார்த்தமாகக்கொண்டு பலபல திவ்யதேசங்களில் வாழ்ந்துகொண்டு நியதமுமத்தாணிச் சேவகம் புரிந்தார். நம்பெருமாள் ஸந்நிதியில் ஏழெட்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து வேதபாராயண கைங்கரியம் நிர்வஹித்தருளினார். திருநின்றவூர், திருநீர்மலை, திருவல்லிக்கேணி, ஆழ்வார் திருநகரி முதலான பல தலங்களில் மாதக்கணக்கிலும் வருஷக்கணக்கிலும் எழுந்தருளியிருந்து உபயவேத கோஷ்டிகளையும் நிர்வஹித்தருளினார்.

ஸ்ரீகாஞ்சியில் அடியேனை வியாஜமாக்கிக்கொண்டு உலகம் புகழநின்ற வேத வேதாந்த வைஜயந்தி வித்யாசாலையை நிறுவிய மஹாநுபாவர் இவரேயாவர். இவர் தம்முடைய பொன்னடிக்கால் நலத்தினாலேயே காஞ்சியில் பலபலர் யோக்யதைகள் பெற்றார்கள். காஞ்சியில் அனேக திவ்யதேசங்களில் அவிச்சிந்நமாக வேத பாராயண கைங்கரியம் நடந்தேறும்படி பல வித்யார்த்திகளை க்ரமாந்த யஜுர்வேதத்தில் தேறினவர்களாம்படி அத்யயனம் செய்வித்தருளியவர் இந்த ஸ்வாமியே.

இந்த ஸ்வாமி ஸன்னிதியில் வேதாத்யயனம் பண்ணத்தொடங்கினவர் 20-30 ஸ்வாமிகள். அவர்களில் நிலைநின்று க்ரமாந்தம் அதிகரித்து வேதபாராயணத்தில் ச்ரத்தாளுக்களாகவும் இருந்தவர்கள் ஏறக்குறைய பதினைவர்; அவர்களில்சிலர் பரமபதித்தனர். மாமண்டூர் ஆழ்வான், காழியூர் தி. த. ரங்காசாரியர், மாமண்டூர் நரஸிம்ஹாசாரியர், குன்றபாக்கம் தி. அ. தொட்டயாசாரியர், தி. ஈ. சடகோபாசாரியர் போல்வாரை வரிசையாக இழக்க நேர்ந்தது. இப்பொழுது ஜீவித்திருப்பவர்கள் ஸ்ரீ. தி. விஞ்சிமூர் சிங்கராசாரியரும், ஸ்ரீ கோயில் கந்தாடை ஜட்டப்ரோல் ராகவாசாரியரும், தி. அ. புரிசை ஸ்ரீனிவாஸாசாரியரும், ம. திருமலாசாரியரும், அடியேனும். இவரில் முதல்வர் காஞ்சியிலேயே ப்ரதிஷ்டிதராய் உபயவேத கைங்கர்ய நிர்வாஹ துரந்தரராய் விளங்கி வருகிறார். இரண்டாமவர் மயிலாப்பூர் கேசவப்பெருமாள் ஸன்னிதியில் வேதபாராயணகைங்கர்ய நிர்வாஹகராய் இருந்து வருகிறார். மூன்றாமவர் பாம்பே பனஸவாடி திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் வேதபாராயண கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கிறார். ஷை ஸுதர்சநாசார்ய ஸ்வாமி அனுக்ரஹம் பெற்றவர்களில் அடியேனும் ஒருவன். அடியேனுடைய சிறிய ஜாமாதா மணவாள திருமலாசாரியரும் (ஸ்ரீபெரும்பூதூர்) இந்தஸ்வாமி கடாக்ஷத்துக்கிலக்கானவரேயாவர். இவரும காஞ்சியிலேயே வேதபாராயண கைங்கரிய நிரதராய் இருந்து வருகிறார்.

## — ஸ்ரீ காஞ்சீபுரியைப்பற்றி —

ஸ்ரீமதுபயவே. தி. அ. குன்றபாக்கம் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி. குன்றபாக்கம் என்பது சிறந்த வித்வதக்ரஹாரமாக விளங்கி வந்தது. அஞ்சூர் குன்றபாக்கம், மலையடி குன்றபாக்கம் என்று இரண்டு அக்ரஹாரங்களுண்டு. இந்த இரண்டாவது குன்றபாக்கத்திற்குத்தான் வித்வதக்ரஹாரமென்று ப்ரஸித்தி. இங்கு அநந்தாழ்வான் திருவம்சத்தில் ஒரு வித்வத் ஸிம்ஹமும், விஞ்சிமூர் திருவம்சத்தில் ஒரு வித்வத்ஸிம்ஹமும் அவதரித்திருந்தன. முந்தின ஸிம்ஹம் காஞ்சீபுரியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ. ஸ்ரீநிவாஸாசாரிய ஸ்வாமியேயாவர்.

ஸ்ரீ காஞ்சீபுரியானது முற்காலத்தில் பிரபல வித்யாபீடமாக விளங்கிக்கொண்டிருந்ததென்பதை எந்நாட்டினரும் அறிவர். ஏறக்குறைய நாற்பது வருஷங்களுக்கு முன் இம்மஹாநகரத்தில் த்ரிமதஸ்தர்களிலும் பிரபல வித்வான்கள் சதுச்சாஸ்த்ர பண்டிதர்களென்று புகழ்பெற்று விளங்கிக் கொண்டிருந்தார்கள். அன்னவர்களில் குன்றபாக்கம் ஸ்வாமியென்றே ப்ரஸித்திபெற்றிருந்த மஹாஸ்வாமி ஈடுமெடுப்புமில்லாத வித்வத் ஸார்வபௌமராக விளங்கியவர். குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமியென்றே இவர்க்கு ப்ரஸித்தி. வடதேசங்களில் சிங்களாசார்ஸ்வாமி யென்று

ப்ரஸித்தி. இந்த ஸ்வாமி சதுச்சாஸ்த்ரங்களிலும் வல்லவரெனிலும் நியாய வேதாந்தங்களில் அதிஸாஸாதாரணமான வைதுஷ்யம் பெற்றிருந்தார். நியாய சாஸ்த்ரத்தில் யார் எத்தனை கோடிகள் சொன்னாலும் இந்த ஸ்வாமியின் கோடியே மேம்பட்டு நிற்குமென்று ஸகல வித்வான்களும் ஏககண்டமாகச் சொல்லுவார்கள். ஸ்வாமியினுடைய திருமாளிகை சின்ன காஞ்சீபுரம ஸன்னிதி வீதியிலுள்ளது. அந்த வீதியிலேயே ஸ்ரீ வானமாமலைமடத்தில் ஸ்வாமியினுடைய தலைமையில் ஸம்ஸ்க்ருத பாடசாலை 20 வருஷகாலம் வெகு சிறப்பாக நடந்துவந்தது அதில் நியாயவேதாந்த ப்ரவசனம் செய்து பலபேர்களை சாஸ்த்ராதிகாரிகளாக ஆக்கியருளினர் அக்காலத்தில் வாயி நாராயணாசார்யரென்றும், எலத்தூர் கிருஷ்ணாசார்யரென்றும்ப்ரஸித்தர்களான இரண்டு மாதவர்கள் ஸ்வாமியிடம் நியாய சாஸ்த்ரத்தைப் பூரணமாக வதிகரித்துப் புகழ் பெற்றார்கள். ஸ்ரீ வானமாமலையாஸ்தானத்தை இப்போது அலங்கரித்தருளா நின்ற பெரிய ஸ்வாமி சில வருஷ காலம இங்கே யெழுந்தருளியிருந்து ஸ்வாமியிடம் க்ரோடபத்ரங்கள் வாசித்தார்.

ஸ்வாமியினுடைய பாண்டித்யத்திற்கு சாச்வத ஜயஸ்தம்பமாக தத்வரத்நாவளியென்கிற க்ரந்தமொன்று மணிமஞ்ஜூஷையென்கிற வியாக்கியானத்தோடுங்கூட அவதரித்து (தெலுங்குலிபியில்) அச்சாகியுமுள்ளது. ஸ்ரீ பாஷ்யத்தை அப்படியே ஸ்ரக்தரையில் ச்லோகமாக்கின க்ரந்தமிது. பூர்த்தியாகவில்லை. ஏறக்குறைய ஒரு அத்யாயத்திற்குத்தான் இந்த க்ருதிரத்னம் அமைந்தது. சென்னையில் சிங்கம் செட்டி யதீந்த்ரப்ரவண செட்டி சாரிடியார் இந்த மஹாக்ரந்தத்தை தங்களுடைய பொருட்செலவில் அச்சிட்டார்கள்.

தி. வி. ஸ்ரீரங்காசார்யஸ்வாமி—குன்றபாக்கத்தில் எழுந்தருளியிருந்த விஞ்சிமூர் வித்வத்ஸிம்ஹத்திற்கு ஸ்ரீரங்காசார்யர் என்று திருநாமம். திருப்பதி புரிசை ஸ்வாமி இந்த விஞ்சிமூர் ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி ஒருவரையே ந்யாயவித்வான் என்று ஒப்புக்கொள்வர். அவ்வளவு ஆழ்ந்த வ்யுத்பத்தியுள்ளவர் என்கை. இவருடைய திருக்குமாரர்கள் மூவர் விளங்கிவருகிறார்கள்.

ஸ்ரீமத் தி அ ராமாநுஜாசார்ய ஸ்வாமி யென்பவரும்; ஸ்ரீமத் தி. அ. அப்பா பாஷ்யகாரஸ்வாமி யென்பவரும் இந்த அக்ரஹாரத்தில் எழுந்தருளியிருந்த ப்ரபல வித்வான்களாவர். இவர்களில் ஸ்ரீ ராமாநுஜாசார்யரின் பௌத்ரரான ஸ்ரீ (ஸ்ரீசைல) க்ருஷ்ணமாசார்யர் ப்ரவசன ப்ரவீண வித்வானாய் நமது பாடசாலையில் உபாத்யாயராயும் இருந்து தேவப்பெருமாள் திவ்ய கோஷ்டியில் வெகுகாலம் அங்வயித்திருந்து சிலவாண்டுகளுக்குமுன்பு பரமபதித்தார். அப்பாஸ்வாமி திருவல்லிக்கேணியில் பலர்க்கு ப்ரவக்தாவாக எழுந்தருளியிருந்தார். இவர்களோடு அடியேன் நெருங்கிப்பழகின பாக்யமுடையேன்.

## ஸ்ரீபெரும்பூதூர் வித்வான்கள்.

ஸ்ரீபெரும்பூதூரில் 100 வருஷங்களுக்கு முன்பு வைதிக வித்யாப்யாஸத்திற்கு ப்ரஸக்தியே இல்லாமல் இருந்தது. அப்பொழுது ஸ்ரீ உ. வே. பெல்லங்கொண்ட

ராகவாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ குண்டலம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி முதலிய சில வித்வான்களை ஸ்வாமி எம்பெருமானார் அநுப்ரவேசித்து உபய வேதாந்த வர்த்தநீ என்கிற பாடசாலையை ஸ்தாபித்து அதன்மூலமாக நெடுநாள் காவ்ய நாடகாலங்கார சாஸ்த்ரங்களின் ப்ரவசநங்கள் வெகு ஆச்சரியமாக நடந்து வந்தது. நடந்துவருகிறது என்று எழுத அவகாசமில்லாமல், நடந்துவந்தது என்று எழுத நேர்ந்ததைப்பற்றி மிக வருந்துகிறேன். இப் பாடசாலையின் பால்ய யௌவந வார்த்தக தசைகள் மூன்றையும் நன்கறிவேன். (இப்போதும் ஒருவாறு நடந்து வருகிறது.)

ஸ்ரீமதுபயவே. குண்டலம். நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி. இந்த மஹாஸ்வாமி இவ்வூர் பாடசாலையை முன்னம் அபிவிருத்திக்குக் கொண்டுவந்த மஹாபுருஷர்களில் தலைவர். இவரிடத்தில் ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை அதிகரித்து நாளைக்கும் ஜகத்ப்ரஸித்த வித்வச் சிகாமணிகளாக விளங்கும் மஹான்கள் பலருளர். ஸ்ரீபெரும்பூதூரில் வித்வத் வரிஷ்டராய் விளங்கிவந்த மஹாஸ்வாமியான ஸ்ரீமத் உபயவே. தி. ஆஸூரி. ராமாநுஜாசார்யர் ஸ்வாமி, இந்த ஸ்ரீ நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமியின் அந்தேவாஸி என்பதொன்றே இவருடைய அப்ரதிம வைபவத்தை விளக்கவல்லதாகும். இவருடையஜன்மபூமி நைஜாம் இலாகாவில் சேர்ந்த 'இந்தூர்' என்னும் அக்ரஹாரம். வடதேசத்திலிருந்த ஸ்ரீ உ. வே. இல்லந்திர ராகவாசாரியர் ஸ்வாமி யென்பவரிடத்திலும், மற்றும் சில மஹாவித்வான்களிடத்திலும் இவர் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் வாசித்து. கத்தவால் வனபர்த்தி வேங்கடகிரி முதலான ஸம்ஸ்தானங்களில் பரீக்ஷை கொடுத்து வித்வான் என்னும் விருதும் ஸ்வர்ண குண்டலமும் பெற்றவர். அதுபற்றியே குண்டலம் ஸ்வாமி என்றே இவர் வழங்கப்பட்டு வந்தார்.

இருபத்தைந்து திருநக்ஷத்திரத்திற்குள் சதுச்சாஸ்த்ர வித்வானாகி ஆங்காங்கு வாக்யார்த்தமும் சொல்லி ப்ரஸித்திபெற்று இவர் இருபத்தாறுவது திருநக்ஷத்திரத்தில் ஸ்ரீபெரும்பூதூர்வந்துசேர்ந்து. அப்போது அவ்விடத்தில் பர்யாய பாஷ்யகாரராக விளங்கிவந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி எம்பார் ஜீயர்ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீ பாஷ்யாதிகளை அதிகரித்தார். அவ்விடத்திலேயே மஹாவ்யாபகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ உ. வே. ஆடூர் ரங்கஸாமி அய்யங்கார் ஸ்வாமி ஸந்நிதியிலே அருளிச்செயல்களை ஸாங்கமாக ஓதி பகவத் விஷயாதி க்ரந்தங்களை அதிகரித்தார். இப்படி முப்பத்தைந்து திருநக்ஷத்ரம் வரையில் அத்யாத்ம வித்யைகளை அதிகரித்துத் தலைக்கட்டியபின் அவ்வூர் ஸம்ஸ்க்ருத கலாசாலைக்கு ப்ரதம பண்டிதராகவும் அத்யக்ஷராகவும் இவர் வரிக்கப்பட்டார். அந்த வித்யாசாலையிலும், தனியாகத் திருமாளிகையிலும் இந்த ஸ்வாமி பக்கலில் ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசித்தும் ஸ்வரூபக்ரந்தங்களை அதிகரித்தும் உத்தீர்ணரானவர்கள் பலர்.

ஸ்ரீமதுபயவே. காழியூர். ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி: இந்த ஸ்வாமி ஒரு விலக்ஷண பண்டிதராய் விளங்கினவர். 55 வருஷங்களுக்கு முன்பு திருநாட்டுக்கெழுந்தருளினர். நான்கு சாஸ்த்ரங்களையும் முறைப்படி அதிகரித்து ப்ரவசனங்களும் அழகாகச் செய்துபோந்தவர். இளம்பிராயத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வந்து சேர்ந்து அவ்விடத்திலேயே வித்யாப்யாஸம் செய்து அவ்விடத்து ஸம்ஸ்க்ருத கலா

சாலையில் ஸ்ரீமத். உ. வே. வித்வச்சிகாமணி குண்டலம் நரஸிம்ஹாசாரிய ஸ்வாமிக்கு அடுத்தபடியாக ப்ரதாநாத்யக்ஷ பதவியை வஹித்து அநேகரை வித்வான்களாக்கின மஹான் இவர். உபயவேதங்களிலும் இந்த ஸ்வாமி யோக்யதை பெற்றிருந்தவர். மேலே குறித்த ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி முதலான பல மஹநீயர்களின் திருவடிகளிலே பணிந்து ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை அதிகரித்தவர். திருப்பதியில் ஸுப்ரஸித்த வித்வச் சிகாமணியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசாரிய ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தம் பெற்றவரான இவ்வாசிரியர்க்கு விளைந்த அதிசயங்கள் அற்புதமல்ல. இவருடைய ஞானத்திற்காட்டிலும் பரம ஸாத்விகத்வம் போற்றத்தக்கதாயிருந்தது.

ஸ்ரீமத். ஆஸுரி. மஹாஸ்வாமி. தி. ராமாநுஜாசாரியர் ஸ்வாமி: "அதீத மத்த்யாபிதமார்ஜி நம் யச:" என்றதற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளியிருந்த இந்த மஹாஸ்வாமியின் பெருமைகளை அடியேன் பலகால் வெளியிட்டிருக்கிறேன். *செலக் காண்கிற்பார் காணுமளவும் செல்லுங் கீர்த்தியாய்* என்னும்படி விளங்கினவர் இம்மஹா ஸ்வாமி.

ஸ்ரீமத் ஆஸுரி (சின்ன) ராமாநுஜாசாரியர் ஸ்வாமி: கீழே ப்ரஸ்தாவித்த மஹாஸ்வாமியின் பரமக்ருபையினால் அபிவ்ருத்தியடைந்து சின்னஸ்வாமியென்றே பேர் பெற்றிருந்த இந்த ஸ்வாமி ந்யாய வேதாந்தங்களில் ஆழ்ந்த அவகாஹனமுடையராய், சிறந்த வாக்மியாய், ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பலவாண்டுகள் உபாத்யாயராக விளங்கிவந்தார்.

ஸ்ரீமத். வேதவாத்யார் க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமி :— வேதவாத்யார் என்றே வ்யபதிஷ்டரான இந்த ஸ்வாமிக்கு வேதமும் வ்யாகரண சாஸ்த்ரமும் ஸ்வாதீநமாயிருந்ததுபோல் கடல் சூழ்ந்த மண்ணுலகில் வேறு யார்க்கும் வசப்பட்டிருக்கவில்லை யென்று அக்காலத்திலுள்ள ஸகல வைதிகர்களும் ஏகமுகமாகச் சொல்லுவார்கள். இவருடைய பரம்பரையே மிகச் சிறந்த வைதிக பரம்பரை. இவருடைய திருத்தகப்பனாரிடத்தில் வேதமோதித் தேறினவர்கள் உபயகலையாரிலும் அடியேனுக்குத் தெரிந்து ஐம்பதறுபது ச்ரோத்ரியர்களிருந்தார்கள். அடியேனுடைய வேத உபாத்யாயரான ஸ்ரீமதுபயவே. மாம்பள்ளம் ஸ்வாமியும் அந்த மஹாஸ்வாமியிடத்திலேயே வேதமதிகரித்தவராதலால் அவரைப் பற்றி நாடோறும் கால் மணியாவது ப்ரஸ்தாவம் செய்யாமலிருக்கமாட்டார். அப்போது அவருடைய திருககுமாரரான (ப்ரக்ருத) க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் வல்லமையையும் பேசிக்கொண்டிருப்பர், இவரிடத்தில் வேதமோதினவர்களும் வ்யாகரணமோதினவர்களும் பலருண்டு. இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதுர் கலாசாலையில் பலவாண்டுகள் வியாகரணப்ரவசந நிரதராக எழுந்தருளியிருந்தார்; தமது திருமாளிகையில் வேதாத்யாபனமும் தவறுதவர்.

ஸ்ரீமத் பிள்ளைபாக்கம் திருவெங்கடாசாரியர்:— ஸ்ரீபெரும்பூதூர் வித்யாசாலையில் ந்யாயசாஸ்த்ர ப்ரவசன துரீணர்களாய்விளங்கின பண்டிதோத்தமர்களில் பரிகணிதராய்த் திகழ்ந்தவர் இந்த மஹாஸ்வாமி. இவருடன் பிறந்தவர்களான

ஸ்ரீ. உ. வே. பின்னைப்பாக்கம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி, ராகவாசார்ய ஸ்வாமி என்னுமிருவரும் உபயவேதஸாகர பாரதர்சிகளாய் விளங்கி நெடுங்காலம் ஸ்ரீ பெரும்பூதூரில் வாசிககைங்கர்ய தூரந்தரர்களாய் நன்கு வாழ்ந்தவர்கள். திரு வேங்கடாசார்ய ஸ்வாமி பலரை ந்யாயசாஸ்த்ர பாரங்கதர் களாய்ச் செய் தருளினர், முதிர்ந்த பிறகு அருளிச்செயல்களையும் அதிகரித்து ஸம்ப்ரதாய ப்ரவசன ப்ரவீணராயு மெழுந்தருளியிருந்தார்: இவரிடம் சாஸ்த்ராப்யாஸம் பண்ணினவர்களில் (1) ஸ்ரீமத்சித்ரகூடம் அஷ்டகோத்ரம் வேங்கடாசாரியரும் (2) ஸ்ரீமத் தாமல் வங்கீபுரம் பார்த்தஸாரதி ஐயங்காரும் தற்சமயம் ஸேவை ஸாதித்து வருகிறார்கள்.

ஸ்ரீமத் புதுப்பேர் வெங்கடாசாரியர் ஸ்வாமி:— உத்தமாச்ரமியாய் ஸ்ரீ காஞ்சீ அழகிய மணவாள ராமாநுஜஜீயர் ஆஸ்தானத்தை யலங்கரித்திருந்த இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் ஸாஹித்ய வ்யாகரணங்கள் வாசித்துத் தேறி காஞ்சீபுரிக்கு வந்து சேர்ந்து, பெரியகாஞ்சீபுரம் ஏகாம்ரேச்வரன் ஆலய வீதியில் குருக்கள் பாடசாலையிலும் பிறகு அண்ணா ஸன்னிதியில் நடந்து கொண்டிருந்த பாடசாலையிலும் உபாத்யாயராக அமைந்திருந்து அடியேனுடைய திருத்தகப்பனார் திருமேனி பாங்கில்லாதிருந்த காலத்தில் உபாத்யாயராக அமைந்திருந்து அஸ்மதாதிகளுக்கு ஸாஹித்யவ்யாகரணங்கள் கற்பித்து வந்தார். பிறகு ஸ்ரீபெரும்பூதூர்க்கே சென்று சேர்ந்து பத்தெட்டு ஆண்டுகள் அவ்விடத்துப் பாடசாலையில் உபாத்யாயராய் எழுந்தருளியிருந்து மீண்டும் காஞ்சிக்கு வந்து மடாதிபதியாக விளங்கி வந்து திருநாராயணபுரத்தில் திருநாடலங்கரித்தார்.

ஸ்ரீமத் கிடாம்பி நரஸிம்ஹாசாரியர்:— இந்த ஸ்வாமி ஸாஹித்ய நிஷ்ணாதராய் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பல வித்யார்த்திகளை ப்ரவீணர்களாக்கினர்.

ஸ்ரீமதுபயவே. மணவாள. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி: — இவர் வேத— திவ்யப்ரபந்தங்களைப்பூர்ணமாக அதிகரித்து எம்பெருமானார் கோஷ்டிகளைப் பலவாண்டுகள் நிர்வஹித்துவந்ததுடன் ஸ்வாமி ஸன்னிதியில் திருப்பரியட்ட கைங்கர்யமும் நடத்திவந்தார். இவரோடு பரிகணிக்கத்தக்கவர்கள் ஸ்ரீ மணவாள துரைஸாமி ஐயங்கார்ஸ்வாமி, மடம் ரங்காசார்யர்ஸ்வாமி முதலானோர் பலர். இவர் குமாரர்களான ஸ்ரீ. ம. திருவேங்கடாசார்யரும் (அடியேன் இளையஜாமாதா) ஸ்ரீ ம. திருமலாசாரியரும் முறையே திவ்யப்ரபந்தத்திலும் வேதத்திலும் தேர்ச்சி பெற்று கோஷ்டிபரிபாலநம் செய்து வருகிறார்கள்.

ஸ்ரீமதுபயவே. ஸாரநாதாசாரியர் ஸ்வாமி:— இந்த ஸ்வாமி ந்யாய ஸாஹித்ய சாஸ்த்ரங்களைக் கற்று ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பலவாண்டுகள் உபாத்யாயராக விளங்கியிருந்தார்—ஸ்ரீமதுபயவே ஆடூர் ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமியின் தௌஹித்ரரான இவர் ஸ்ரீமத் குண்டலப் ஸ்வாமி ஸன்னிதியில் ந்யாய வேதாந்தங்களைக்கற்று யாதாமஹார்கருபேல் சிறந்த வித்வானென்று புகழ்பெற்று, திருவல்லிக்கேணி ஸ்ரீவேதவேதாந்த வர்த்திநீ ஸபையில் ச்ருதப்ரகாசிகையோடு கூட ஸ்ரீபாஷ்யத்தை பரீக்ஷைகொடுத்து உத்தம ஸம்பாநம்பெற்று வந்து சிலநாட்

களிலேயே ஆசாரியன் திருவடியடைந்திட்டார். ஸ்ரீ பெரும்பூதூர் ஸன்னிதியில் ப்ரதிபக்ஷிகளின் அதர்க்கணச் செயல்கள் அதிகப்பட்டிருந்த காலத்தில் நீதிமன்றங்களில் சென்று சிரமப்பட்டு வெற்றிபெற்றவர்களில் இவர் தலைவராய் விளங்கினர்.

ஸ்ரீமத் குண்டலம்ஸ்வாமி காலத்தில் ஆந்த்ரதேசத்திலிருந்தும் பலர் ஸ்ரீபெரும்பூதூர்வந்து வாசித்து சாஸ்த்ரப்ரவீணர்களாய் உபயவேதாந்த விசாரதர்களாய் விளங்கினுர்களென்பதைஅடியேன் இளமைதொடங்கி அனுபவித்தவன். அன்னவர்களில் ஸ்ரீமத் மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமி என்பவர் மஹாமேதாவியாய் விளங்கினவர். நம்முடைய ஸம்ப்ரதாயார்த்தங்களை ஆந்திர பாஷையில் வெகு சதுரமாக உபந்யஸிக்க வல்லவர். பிறகு கோதாவரீ ப்ராந்தமே எழுந்தருளி பலர்க்கு உபய வேதாந்த ப்ரவசனம் செய்து வந்தார்.

ஸ்ரீமத் அஷ்டகோத்ரம் தேரடி வெங்கடாசாரியர் ஸ்வாமி:— ந்யாயவேதாந்தங்களை யதிகரித்து ஸ்ரீபாஷ்யபகவத்விஷயாதிகாரியாகவும் விளங்கிவந்தனர்.

ஸ்ரீமத் அஷ்டகோத்ரம் (சிவகிரி) ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி:— ஸ்ரீவில்லிபுத்தூர் ப்ராந்தத்தில் ஜநித்த இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் ந்யாயவ்யாகரண வேதாந்தங்களையதிகரித்து ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகாரியாகவும் விளங்கினர்.

# திருமழிசை வித்வான்கள்

திருமழிசை திவ்யக்ஷேத்ரத்தில் பற்பல ப்ரபலவித்வத் ஸார்வபௌமர்கள் எழுந்தருளியிருந்தார்கள். ஸ்ரீபெரும்பூதூர் போலவே இதுவும் ஒரு பெரிய வித்யா பீடமாக விளங்கி வந்தது. சில பெரியோர்களை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன்.

ஸ்ரீமத் வரதாசாரியர் ஸ்வாமி:— இவர் ப்ரசண்ட பண்டிதோத்தமராக இருந்து வந்தார். திருவல்லிக்கேணி ஸ்ரீவேதவேதாந்த வர்த்தினீ ஸபையில் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியோடு கூட சாஸ்த்ர பரீக்ஷகராக எழுந்தருளியிருப்பர். ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளை நித்யப்ரவசனமும் செய்து கொண்டிருந்தார்.

ஸ்ரீமத் புத்தாம் வேங்கடாசாரியர் ஸ்வாமி:— இவர் ந்யாயவேதாந்தங்களில் மிகவும் பரிச்ராந்தராய் ஸதநுஷ்டாந சீலருமாயிருந்தவர்.

ஸ்ரீமத் திருவாழி ஸ்வாமி ஸ்ரீபாஷ்யப்ரவசன நிரதராய் எழுந்தருளியிருந்தார்.

ஸ்ரீமத் அய்யன் ராமாநுஜாசார்ய ஸ்வாமி உபயவேதாந்தப்ரவசன நிஷ்ணாதராயிருந்ததோடு இதிஹாஸ புராணங்களிலும் ப்ரவக்தாவாக இருந்துவந்தார்.

ஸ்ரீமத் ராய்ஜீ ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி:—ப்ரபல வித்வானுயிருந்து சென்னையில் காலக்ஷேபங்கள் ஸாதித்துக்கொண்டெழுந்தருளியிருந்தார். பிறகு உத்த

மாச்ரமியாய்க் கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடாதிபதியாக விளங்கி, பிறகு திருமழிசையே சென்று திருநாடலங்கரித்துவிட்டார்.

ஸ்ரீமத் தாசப்யங்கார் ஸ்வாமி:— இவர் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் பலவாண்டுகள் ஸாஹித்யவ்யாகரண ப்ரவசந நிஷ்ணுதராக வெழுந்தருளியிருந்தார். அடியேனுடைய இளமையில் இந்த ஸ்வாமியின் பரிசயம் மிகவுமிருந்தது. இவர் திருநாட்டுக் கெழுந்தருளி அறுபது ஸம்வத்ஸரங்களாயிருக்கும். இவர் பண்டிதர்களுக்குக் கடிதமெழுதினால் ஆலோசனையில்லாமல் சுலோகமாகவே யெழுதிக்கொண்டு போவர். முற்காலத்தில் திருமழிசையில் ஸாமான்ய சாஸ்த்ரப்ரவீணர்களும் உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களுமல்லாதவர் இருந்ததில்லையென்று ப்ரஸித்தி. முப்பது நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு முந்தின காலம் வரையில் அந்த ப்ரஸித்தி அநபாயமாயிருந்துவந்ததை யறிவேன். உத்தரராமசரிதத்தில், ''புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம் விபர்யாஸம் யாதோ கநவிரலபாவ: க்ஷிதிருஹாம்'' என்ற ச்லோகமே இப்போது நினைவுக்கு வருகிறது. இது திருமழிசையின் பரிஸ்திதிக்கு மட்டுமன்று. இனி காஞ்சிக்குத் திரும்புகிறேன்.

## ஸ்ரீ காஞ்சீ கோயில் கந்தாடை திருவம்சஸ்தர்கள்

தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியில் மூன்று திருமாளிகைகள் 1) ஸ்ரீமத்-முதலியாண்டான் திருமாளிகை, 2) ஸ்ரீமத். திருமணிஸ்வாமி திருமாளிகை. 3) ஸ்ரீமத் அப்பன் ப்ரணதார்த்திஹராசார்ய ஸ்வாமிதிருமாளிகை. இம்மூன்று திருமாளிகை ஸ்வாமிகளும் ப்ரக்யாத சிஷ்யஸம்பத்துடன் விளங்கி வருகின்றார்கள்.

## பிள்ளைலோகம் ஸ்வாமிகளின் திருவம்சம்

திருக்கடல்மல்லை திவ்யதேசத்தின் ப்ரதான ஆசார்ய புருஷரான பிள்ளைலோகம் ஸ்த்தலசயநத்துறைவார் ஜ்ஞாநாநுஷ்டானஸம்பந்நராய் மிகப்ரஸித்தராக விளங்கினார். அந்த ஸ்வாமிக்கு ஸந்ததியில்லை. அவருடைய திருத்தம்பியாரான ஸ்ரீ. பிள்ளைலோகம் பாஷ்யகாராசார்ய ஸ்வாமியின் திருவம்சம் விளங்கிவருகிறது. அவருடைய பௌத்ரர்களான *ஸ்ரீ பிள்ளைலோகம் பாஷ்யகாராசாரியர், *ஸ்ரீஸ்தலசயநம் ஆசாரியர்* என்கிற இரண்டு ஸஹோதரர்கள் ப்ரவக்தாக்களாக விளங்கி வருகின்றார்கள். மேன்மேலும் விளங்குவார்களாக.

## விச்சிந்தாங்கல் அக்ரஹாரம்

பாலாற்றின் கரையில் விளங்கும் இவ்வூரும் வித்வதக்ரஹாரமென்று ப்ரஸித்தி பெற்றிருந்தது. இவ்வூரில்பிரதிவாதிபயங்கரம் திருவேங்கடாசார்ய ஸ்வாமி என்பவர் ந்யாயவேதாந்தவித்வானாய்விளங்கினவர்.(துரைஸாமி ஐயங்கார்) 60 வருஷங்களுக்கு முன்பு இவ்வக்ரஹாரத்தில் பெரிய ஸம்ஸ்க்ருத பாடசாலையை ஸ்தாபித்தார். அதன் மூலமாக ஏறக்குறைய 20 வித்வான்கள் தேறினார்கள். தையில் மகத்தன்று யதோக்தகாரி எம்பெருமான் இவ்வூருக்கெழுந்தருளி பெரிய மஹோத்ஸவம் கண்டருள்வர். அது நின்று பல வருடங்களாகிறது........இவ்விடத்து ஸ்வாமிகளெல்லோரும் பெரும்பாலும் வெளியேறிவிட்டார்கள்.

## ஜடப்ரோல் கோயில் கந்தாடை அண்ணன் ஸ்வாமிகள்

கர்னூல் ஜில்லாவில்ஜடப்ரோல் என்றநவாபு ஸம்ஸ்தானம்மிகவும்ப்ரஸித்தமாக விருந்தது. அவ்விடத்து ஆசார்யபுருஷர்களில் மூவர் பெரும்பாலும் காஞ்சியிலேயே வாழ்ந்தவர்கள். *ராமாநுஜாசார் ஸ்வாமி*: இவர் தாடீ ராமாநுஜாசார்யர் என்றே வழங்கப்படுவர். இவருடைய திருத்தகப்பனர் *சப்தகுஞ்ஜத்தீபரங்காசார்யஸ்வாமி* என்றே ப்ரஸித்திபெற்றவர். திருப்புட்குழி அப்பாஸ்வாமி என்கிற ஸ்ரீக்ருஷ்ண தாதாசார்ய ஸ்வாமி இவரிடத்தில் மஹா பாஷ்யாந்தம் வியாகரணம் வாசித்தாரென்று ப்ரஸித்தி.

ஸ்ரீமத் வாதிகேஸரி ஸ்வாமி:— கீழ் ப்ரஸ்துதரான ஸ்ரீ ராமாநுஜாசாரிய ஸ்வாமியின் குமாரர்கள் மூவரில் கனிஷ்ட குமாரரான இந்த ஸ்வாமி இளமையிலேயே சிறந்த வித்வானென்று பெயர்பெற்றூர். உபயவேதங்களையும் அதிகரித்து முக்கியமாக வியாகரணத்தில் நிஷ்ணுதராய் பகவத்விஷயாதிகாரியாயுமிருந்தார். ஒரு ஸமயம் ஸ்ரீபெரும்பூதூரெம்பெருமானுரை ஸேவிக்கச்சென்று அன்றே அவ்விடத்தில் அநாயாஸமாக ஆசாரியன் திருவடிசேர்ந்தார்.

ஸ்ரீ வாதிகேஸரி ராமாநுஜாசாரியர்:— கீழ் ப்ரஸ்துதரான ஸ்ரீ வாதிகேஸரி ஸ்வாமியின் மூத்த திருக்குமாரரானவிவர் மிக்க இளமையிலேயே அபரிமிதமான கல்விகளைக் கற்றூர். உபய வேதங்களையும் தட்டுத்தடங்கலின்றி அவலீலையாகப் பரீக்ஷை கொடுக்கவல்லவரா யிருந்தார். ஆசாரத்தில் வஸிஷ்டரையும் வென்றிருந்தார். ஸ்ரீமத் ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசாரிய ஸ்வாமியின் தௌஹித்ரனும், அபியானபுத்ரனுமான விவர் மிகு ஞானச்சிறுகுழவியென்று அனைவராலும் கொண்டாடப்பட்டவராயிருந்து இளமையிலேயே மறைந்துவிட்டது நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்து உகும்.

ப்ரஸ்துத ஸ்ரீமத் தாடி ராமாநுஜாசாரிய ஸ்வாமியின் ஸஹோதர முறையினர்களான *ஸ்ரீமத்திருவேங்கடாசார்ய ஸ்வாமியும், *ஸ்ரீமத்வரதாசாரியர்ஸ்வாமியும் சிங்கராசார்ய ஸ்வாமியும், 60 வருஷங்களுக்கு முன்பு ப்ரஸித்த வித்வான்களாக விளங்கிவந்தார்கள். அவர்களுடைய ஸந்தானங்களும் வைதிக ஸ்ரீயுடன் விளங்கி வருகின்றனர்.

## ஈச்சம்பாடி திருவம்சம்

ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி:— ஸ்ரீ காஞ்சீபுரியில் தென்னுசார்ய ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களில் தலைவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை. ஈச்சம்பாடி. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி திருநாடலங்கரித்து எண்பது வருடமிருக்கும். ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயங்களும அஷ்டாதச ரஹஸ்யங்களும் வியாக்கியானங்களும் அந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களென்று அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி (ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி) அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அந்த ஸ்வாமியை அடியேன் ஸேவிக்க ப்ரஸக்தியில்லையாயிற்று. அந்த ஸ்வாமியின் பெரும்புகழ் அபாரமானது. ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பா ஸ்வாமியென்று ப்ரஸித்தராக எழுந்

தருளியிருந்த ஸ்ரீக்ருஷ்ணதாதாசார்ய ஸ்வாமியும் இவரும் ஸமகாலஸ்தர்களாம். பரஸ்பரம் வெகு கௌரவத்தோடு வாழ்ந்தவர்களாம். இந்த ஸ்வாமியின் திருக்குமாரர் *ஈச்சம்பாடி ராமாநுஜாசார்ய ஸ்வாமி' என்பவர் மஹாதேஜஸ்வியாகவும் ஜ்ஞாநிகராகவும் விளங்கினவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் இளமையில் குருபரம்பராப்ரபாவம் (ஆறாயிரப்படி) ஸேவித்தேன். அந்த ஸ்வாமி பரமசாந்தர். மஹாஸாத்விகப்ரக்ருதி. திருமாளிகையை விட்டுக் கீழே யிறங்காமல் ஏகாந்த சீலராக எழுந்தருளியிருந்தவர். அந்த ஸ்வாமி ஸன்னிதியிலே பலபல நல்வார்த்தைகளும் கேட்டிருக்கிறேன். வம்பு தும்புகள் பேசாமல் பூப்பறித்தாற்போலே பருது மதுரமாக ஸாதிப்பவர். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து 55, 60 ஆண்டுகளாயின. ... ... ... ... ... *

விஜயராகவாசாரியர் ஸ்வாமி:—இந்த ஸ்வாமி விளக்கொளி தேசிகன் ஸன்னிதியில் அத்யாபக கைங்கரியத்தை 60 ஸம்வத்ஸர காலம் பொறுப்புடன் செய்து வந்தார். அக்காலத்தில் அந்தஸன்னிதி தென்கலைத் திருமண்காப்புடன் விளங்கியது. அதை மாற்றமுயன்ற பிறர் ஒருநாள் இவர்ஸன்னிதிதிருக்காப்பு சாற்றிப்பூட்டும்போது சாவியைக் கைப்பறறவேணுமென்று ஆக்ரஹங்கொண்டு இவர் கைமேல் சம்மட்டியால் அடித்து பலாத்காரமாக அதைப்பிடுங்கிக்கொண்டு உள்ளேப்ரவேசித்து காரைத் திருமண்காப்பை இடித்த கதை ஒரு பாரதம். பிறகு உத்தமாச்ரமியான இந்த ஸ்வாமியை அடியேன் மாதாமஹ ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி தமது மடத்திலேயேவைத்து ஆதரித்தார். இவரிடத்தில் அடியேனுக்கு நித்யாநுஸந்தானம் அதிகரிக்க ப்ராப்தமாயிற்று.

<u>ஈச்சம்பாடி பெரிய வரதாசாரிய ஸ்வாமி</u> யென்பவர் 60 வருஷம் தேவப்பெருமாளுக்கு கைங்கர்யம் செய்தவரென்று ப்ரஸித்தம். அக்கைங்கர்யமாவது—அத்யாபககைங்கர்யமும் சாலைக்கிணற்றிலிருந்து தீர்த்தம் கொண்டுஸமர்ப்பிப்பதும்.

இதே திருநாமத்தைப் பூண்ட மற்றொரு பெரியவர் வெகுகாலம் அத்யாபக கைங்கர்யம் செய்து ஸமீபகாலத்தில் பரமபதித்தார்.

<u>ஈச்சம்பாடி ஸ்ரீனிவாஸராகவாசாரியர் ஸ்வாமி:</u>— இந்தஸ்வாமி வானமாமலை மட வித்யாசாலையில் ஸ்ரீமத உ. வே. ஷஷ்டி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் ஸாஹித்ய வ்யாகரணங்களையும், ஆழ்வார்திருநகரியில் ப்ரக்யாதராய் எழுந்தருளியிருந்த (ஆத்தான் திருமாளிகையைச் சேர்ந்த) ஸ்ரீமத் பரமஹம்ஸ. அப்பன் ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியில் பகவத்விஷய ரஹஸ்யாதிகளையும் ஸேவித்து ப்ரவசநப்ரவீணராயுமிருந்து பிறகு உத்தமாச்ரமத்தையும் ஸ்வீகரித்துப்பரமபதித்தனர்.

## ஸ்ரீகாஞ்சீ ஷஷ்டி திருவம்சஸ்த ஸ்வாமிகள்

சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்து திருவம்சத்தில் அவதரித்ததனால் ஷஷ்டியார் என்றே குடும்பப்பெயராக வழங்கி வந்த ஒருகுடும்பம் ஸ்ரீகாஞ்சியில் விளங்குகிறது. அடியேனுடைய மாதாமஹரான ஸ்ரீமத். அழகியமணவாள ஜீயர் ஸ்வாமியும் இக்குடும்பத்திற்குச் சேர்ந்தவராகையால் ஷஷ்டி ஜீயர் என்றே வழங்கப்பட்டு

வந்தார். அந்த ஸ்வாமியின் (பூர்வாச்ரம) திருக்குமாரரான *ஸ்ரீ. ஷஷ்டி திருவேங்கடாசார்யர் ஸ்வாமி* (அடியேன் மாதுலர்) ஸ்ரீமத். குன்றபாக்கம்ஸ்வாமி ஸன்னிதியில் நியாய மீமாம்ஸைகளை யதிகரித்து ஸ்ரீ பாஷ்யமும் ஸேவித்து அனந்தாழ்வார் வாதார்த்தங்களிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலேயே ஸம்ப்ரதாயக்ரந்தங்களையெல்லாம் பலகால் ஸேவித்திருந்தார். ஆனால் இவருடைய அப்ரதிம பாண்டித்யம் ப்ரகாசிக்க வழியில்லாமல் போயிற்று. ஏனென்றால், அடியேனுடைய திருத்தகப்பனார் இளமையில் திருநாடலங்கரித்து விட்டபடியால் எங்களுடைய பூர்விகமான சுரோத்ரியக்ராமபரிபாலநபாரத்தை அடியேனுடைய திருத்தாயாருக்குத்துணையாக இவர் ஏற்றுக்கொண்டு அஸ்தமிதாந்யபாவராய் அதிலேயே ஊன்றியிருக்க நேர்ந்து ப்ரவசநத்திற்கு வழியில்லாமல் போயிற்று.

ஸ்ரீஷஷ்டி க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமி: இந்த ஸ்வாமி கீழண்டை மாடவீதியில் எழுந்தருளியிருந்தார். இவர் விசேஷித்து வ்யாகரண சாஸ்த்ரத்திலும் உபய வேதாந்தங்களிலும் பாண்டித்யம் பெற்று வானமாமலை மடத்தில் நடந்து கொண்டிருந்த பாடசாலையில் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தார். ப்ரவசனகாலந் தவிர மற்ற காலத்தில் இவர் ஒருவரோடும்வார்த்தை சொல்லாதே "மந்த்ரரத்நாநுஸந்தாந-ஸந்ததஸ்புரிதாதர" ராயிருந்ததை அடியேன் நேரிலறிந்தவன். அதனால் அக்காலத்துப்பெரியோர் இவரை 'ருஷி' என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். அடியேனுடைய திருத்தகப்பனார் இவரிடம் வியாகரணம் வாசித்தார்.

ஸ்ரீ. ஷஷ்டி ஸ்ரீனிவாஸவரதாசாரியர். முன்னம் ப்ரஸ்துதரான ஸ்ரீமத் ஷஷ்டி க்ருஷ்ணமாசார்யஸ்வாமியின் ஸ்வீக்ருத குமாரரானஇந்தஸ்வாமிவியாகரண, தர்க்க சாஸ்த்ரங்களில் மஹாநிபுணர். அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் காவ்ய நாடகாலங்காரங்களைப் பரிபூர்த்தியாக அதிகரித்தவர் இவரொருவரே நெடுநாள் வாழ்ந்தவராக எனதுநினைவுக்குவருகிறார். வெகுஅழுத்தமானவ்யுத்பத்தியுடையவர். ஸ்ரீமத். ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியில் பகவத்விஷய ரஹஸ்யாதிகள் அதிகரித்து நல்ல வாக்மியாய் விளங்கினார் ஸ்ரீமத். உ. வே. திருமலை ஈச்சம்பாடிதிருவேங்கடாசார்ய ஸ்வாமிக்கும் ஸ்ரீ உ. வே திருமலை விஞ்சிமூர் பாஷ்யகார ஸ்வாமிக்கும் உசாத்துணையாகவிருந்து தென்னாசார்ய தர்சன நிர்வாஹகராயிருந்த பெருமையும் இவர்க்குள்ளது. இவர்க்கும் ஔரஸபுத்ரனில்லாமையாலே ஜ்யேஷ்டதௌஹித்ரனான கோ. க. அ. ராமாநுஜாசாரி என்பவனையே புத்ரவத் அபிமானித்திருந்தார்.

ஸ்ரீமத் ஆசாணிமாலை — திருவேங்கடாசார்யஸ்வாமி: இந்த ஸ்வாமி காஞ்சீபுரத்தில் ஸ்திரவாஸமாக வந்த சேர்ந்து ஸ்ரீமத். குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியிலேயே ந்யாயசாஸ்த்ரத்தைப் பூர்த்தியாக அதிகரித்து மாவதூரகராய் விளங்கினார். ஸ்ரீமதுபயவே ஜகத்குரு காதிஸ்வாமிஸன்னிதியில் (யாத்திரையில்) சிலவாண்டுகள் ஆஸ்தாந வித்வானாக எழுந்தருளியிருந்தார். புதுக்கோட்டை, வனபர்த்தி, கத்வால் முதலான ஸம்ஸ்தானங்களில் பலவாண்டுகள் வர்ஷாசனம் பெற்றுவந்தார். இவர் வித்யார்த்தி தசையில் காஞ்சீவாஸம் பண்ணினாரேயல்லது பிறகு பெரும்பாலும்

விதேசங்களிலேயே ஸஞ்சரித்து ப்ரவசனங்கள் செய்து போந்தார். இவர்க்கு வித்வான் திருவேங்கடாசாரியரென்றே ப்ரஸித்தியிருந்தது.

ஸ்ரீமத் திருமலை விஞ்சிமூர் ஸ்ரீனிவாஸாசார்யர் ஸ்வாமி: இந்த ஸ்வாமியும் ஸ்ரீமத்குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸாமாந்ய விசேஷசாஸ்த்ரங்களையதிகரித்து ஸம்ப்ரதாய க்ரந்தங்களிலும் வல்லமை பெற்று வித்வானாக விளங்கினார். இவருடைய குடும்பம் பரம்பரையாக பரமைகாந்தியார் என்றே வழங்கப்பட்டு வந்தது. ஸதாசாரசீலமான குடும்பம். வேதாத்யயநமும் திவ்யப்ரபந்தாத்யயநமும் அவிச்சின்னமாக நிகழப்பெற்றகுடும்பம். ஸ்ரீமத் பரமஹம்ஸ ஷஷ்டி ஜீயர் ஸ்வாமிக்கு அடியேனுடைய திருத்தகப்பனாரைப்போலவே இவரும் ஒரு ஜாமாதா. இவருடைய அத்விதீயபுத்ரரான ஸ்ரீமான் *தி வி. சிங்கராசார்யர்* உபயவேத பாரங்கதராய் ப்ரவசனதுரந்தரராய் பகவத்கைங்கர்ய நிரதராய் நமது வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலை உபாத்யாயருமாய் விளங்கி வருகிறார். ஷடி தி. வி. ஸ்ரீனிவாஸாசார்யர் ஸ்வாமியின் திருத்தம்பியாரே ஸ்ரீமத். 'தி. வி. பாஷ்யகாரர் ஸ்வாமி* என்று ப்ரஸித்தராய் விளங்கினவர். அவருடைய திருக்குமாரர் ஸ்ரீமத் * தி.வி. நரஸிம்ஹாசாரியர்* ப்ரதிஷ்டிதராய்த் திருவல்லிக்கேணியில் விளங்கி வருகிறார்.

ஸ்ரீமத் உளுந்தை ரங்காசாரியர் ஸ்வாமி: இந்த ஸ்வாமி ஸ்ரீகாஞ்சீ யதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதிவீதியில் எழுந்தருளியிருந்தவர். வந்தவாசியருகில் உளுந்தையென்னும் அக்ரஹாரத்தில் சிஷ்யர்களுடையராய் அடிக்கடி அங்கும் வாஸமாக இருந்தபடியால் உளுந்தை ரங்காசார்யரென்று வழங்கப்பட்டு வந்தார். இந்தஸ்வாமி ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நராயிருந்ததோடு ஸர்வபூதஸுஹ்ருத்தென்று பேர் பெற்றிருந்தார்.

ஸ்ரீமத். அத்தங்கி தெட்டு தாதாசாரியர்ஸ்வாமி: ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ந்யாய வேதாந்தங்களையதிகரித்து உபயவேதாந்த ப்ரவீணராய் காஞ்சியில் ஸ்ரீ யதோக்தகாரியெம்பெருமான் ஸன்னிதி வீதியில் வாழ்ந்து வந்த இப்பெரியாரை ரஸிகவித்வான் என்று அடியேன் மதித்திருந்தேன்.

[தொடரும்

---

# அன்பர்களுக்கு அறிவிப்பு

பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீ ஸ்வாமியின் திருமேனி இன்னமும் பரிபூர்ணமான ஸ்வாஸ்த்யம் அடையாததனால் தொடர்ந்து வெளிவரவேண்டிய சில விஷயங்கள் [திவ்யப்ரபந்த மஹாநிதி, திவ்யதேசாநுபவம், ஸர்வசாஸ்த்ரார்த்த ரத்னாவளி போன்ற விஷயங்கள்] பிரசுரிக்கப்படவில்லை. அடுத்த ஸஞ்சிகை வெளிவருவதற்குள் எல்லாம் ஒழுங்காகும், ஸ்ரீ ஸ்வாமியின் திருமேனியும் பரிபூர்ண ஸ்வாஸ்த்யமடையும் என்று நம்பிக்கை.

தி. அ. அனந்தாழ்வான்.

# சிறிய திருமடலின் கருத்துச் சுருக்கம்.

(இப்பூமண்டலத்திலுள்ளார் புருஷார்த்தங்கள் மூன்றென்பர் என்று ஸாதிக்கத் திருவுள்ளம்பற்றி முந்துறமுன்னம் பூமிப்பிராட்டியை ப்ரஸ்தாவிக்கிறார்.) எம்பெருமானது பத்தினியாகையாலே 'பூமிப்பிராட்டி' என வழங்கப்பெறுகின்ற இந்நிலமகள் ஸ்திரீகளுக்கு உரிய லக்ஷணங்களை நன்றாக வுடையவளாயிருக்கின்றாள்; எங்ஙனே யெனில்;—நுனியில் கறுத்த இரண்டு கொங்கைகளை யுடையராயிருப்பர் மாதர்கள்; இந்நில மகளும் மேகங்கள் படியப்பெறுவதனால் கறுத்த சிகரத்தையுடையனவான திருமாலிருஞ்சோலை திருவேங்கடமெனும் இரண்டு சிறந்த திருமலைகளைக் கொங்கைகளாகக் கொண்டிருக்கின்றாள்; மாதர்கள் சிறந்த ஆடையை அணிவர்களே; இந்நிலமகளும் கடல்தன்னை வஸ்த்ரமாக அணிந்து கொண்டிரா நின்றாள்; மாதர்கள் ஒளிமிக்கதொரு சுட்டியை நெற்றிக்கு அணியாகக் கொள்வர்களே; இவளும் சூரியனைச் சுட்டியாக வுடையாள்; மாதர்கள் ரத்நஹாரங்களை யணிந்த மார்பையுடையராயிருப்பர்களே; இவளும் கலக்கத்தாலும் மணிகளைக் கொழித்துக்கொண்டு வருவதாலும் செம்மைபொருந்திய வெள்ள நீரையுடைய ஆறுகளை ஆரம் பூண்ட மார்பாக வுடையாள்; மாதர்கள் கரிய கூந்தல் முடியை யுடையராயிருப்பர்களே; இவளும் நீர்கொண்டெழுந்த காள மேகங்களைக் கூந்தலாக வுடையாள்; குலமாதர் கட்டுங் காவலுமா யிருப்பர்களே; இவளும் ஆவரண ஜலத்தையே தனக்குக் காப்பாக வுடையாள்.

ஆக இவ்வகைகளாலே ஸ்த்ரீகட்கு உரிய லக்ஷணங்கள் அமையப் பெற்றுள்ள இந்நிலமகளிடத்து வாழ்கின்ற மனிசர்களால் சொல்லப்படுகின்ற புருஷார்த்தங்கள்—தருமம், அர்த்தம், காமம் என மூன்றேயாம். இவற்றுள் பிரதானமான காம புருஷார்த்தத்தைப் பெற்றவர்கட்கு மற்றையிரண்டு புருஷார்த்தங்களும் எளிதில் பெறப்பட்டனவாம்.

இம்மூன்று தவிர மோக்ஷமென்றொரு நான்காவது புருஷார்த்த மிருப்பதாகச் சிலர் கூறுவது விவேகமற்ற கூற்றேயாம். விவேகமுள்ளவர்கள் மோக்ஷமென்றொரு பரோக்ஷ புருஷார்த்தமுள்ளதாகச் சொல்லவேமாட்டார்கள். இதனை நீங்களே நன்கு தெளிந்துகொள்ளுமாறு நான் விவரிக்கின்றேன், கேளுங்கள்.—

மோக்ஷத்துக்குப் போகிறவர்கள் ஸூர்யமண்டலத்தைப் பிளந்துகொண்டு அதனூடே போவதாம்; அந்த ஸூர்யன் ஒற்றைச்சக்கரத் தேரிலிருப்பவனும்; அத்தேருக்கு ஏழு குதிரைகள் பூட்டியுள்ளனவாம்; அக்குதிரைகள் மேகமண்டலத்தில் ஸஞ்சரிப்பனவாம்; மிகத் தாழ்ந்த நிலத்திலே இருந்துகொண்டு நம்மாற் கண் கூசாதே காணவுமொண்ணாத அந்த ஸூர்ய மண்டலத்தைப் பிளந்துகொண்டு ஒருவன் போவதென்பது எவ்வளவு பொருத்தமான வார்த்தையென்பதை நீங்களே விமர்சிக்கலாம். அவ்வழியே போனவர்கட்கு மீட்சியில்லாத ஒரு வைகுந்த மாநகர் கிடைக்கின்றதாம்; அதில் ஆராவமுதம் அநுபவிக்கப்படுகின்றதாம்; இதுதான் மோக்ஷ புருஷார்த்தமாம். இத்தனையும் முழுப்பொய்புரையேயன்றி இப்படியும் ஒன்று இருக்கக்கூடியதுண்டோ? அப்படிப்பட்ட மோக்ஷமென்பதொன்று உள்ளதாகவே வைத்துக்கொள்வோம். இருட்டறையில் விளக்குப்போலே ஸகல குணங்களும் நன்கு விளங்குமிடமான அர்ச்சாவதாரத்தைவிட்டு "உண்டோ

இல்லையோ?'' என்று ஸந்தேஹித்தற்கிடமான அம்மோக்ஷநிலத்தைப் பற்றுவதும் ஒரு பொருளோ? மாம்ஸாபேக்ஷ உள்ளவர்கள் முயலை விட்டுக் காக்கையைத் தொடர்ந்து செல்வதோடொக்குமன்றோ அஃது. [இதுவரையில் ஆழ்வார் தாமான தன்மையிலே நின்று அருளிச்செய்தது; இனி மேலுள்ளதெல்லாம்—க்ருஷ்ணாவதாரத்தில் குடக்கூத்திலே ஈடுபட்டு அன்னவனை அனுபவிக்கப் பெறாமையாலே மடலெடுக்கத் துணிந்த ஒருபிராட்டியின் பாசுரத்தாலே தமது நிலையைப் பேசுகிறபடி.]

ஓ மங்கைமீர்! எனக்கு நேர்ந்ததொரு அவஸ்தையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்; நான் உலகத்தில் ஸம்ஸாரவாழ்க்கைப் பெண்டுகள் செய்கிறபடியே தலைமயிர் முடியை எடுத்துக் கட்டிக் கச்சு அணிந்துகொண்டு அரையிலே மேகலை தரித்துக் கண்ணிலே மையிட்டு இப்படி அலங்காரங்கள் செய்துகொண்டு பந்தடிக்கும் விளையாட்டிலே ஊன்றியிருந்தேன்; இருக்கையில், தாமரைக்கண்ணனென்று பேர்பெற்றானொருவன் அனைவரும மகிழப் பறையறைந்துகொண்டு "இக்கூத்துக்குத் தப்பிப்பிழைக்கும் பெண்டிரும் இத்தெருவே உண்டோ?'' என்று சொல்லிக்கொண்டு குடக்கூத்தாடா நின்றமைகண்ட பெண்டிர்களெல்லாரும் "அடி பரகால நாயகி! குடக்கூத்துக்காண நீயும் வரமாட்டாயோ?'' என்றழைக்க, போராத காலம் வலிதாயிருந்தபடியால் நானும் சடக்கென வெழுந்து அங்கே சென்றேன்; சென்றதும் மேனிநிறமிழந்தேன், கைவளைகள் கழன்றொழியப் பெற்றேன்; ப்ரியஹிதபரர்கள் சொல்லுமதைக் காதுகொடுத்துங் கேட்கமாட்டாத நிலைமையளாயினேன்; அறிவென்பது அடியோடே போயிற்று; சரீரம் ஒழிந்தால் ஆறியிருக்கலாமே; அதுவும் ஒழிந்ததில்லை; பேதைமை மிக்கது; இங்ஙனேயான என்னை என்தாய் கண்டு வருந்தி எப்படியாகிலு மென்னைத் தெளிவிக்கவேண்டி பாகவத ஸ்ரீபாததூளியைக்கொண்டு காட்பிட்டாள்; செங்குறிஞ்சி மாலையை நிரூபகமாகவுடைய சாஸ்தா என்னும் தேவதாந்தரத்திற்கு ஓர் அஞ்சலியும் செய்தாள்; அத்தனை செய்தும் என் மனோ வியாதி தீரவில்லை; பிடித்த பைத்தியம் கழியவில்லை; போன மேனிநிறம் மீண்டதில்லை.

இங்ஙனமாக நான் தளர்வுற்றிருக்கும்படியைக் கண்ட சில பழங்கதை புணர்ந்த பாட்டிமார்கள் வந்துசேர்ந்து 'ஐயோ, குறிசொல்லுங் குறத்தியை வரவழைத்துக் குறிகேட்கலாமே; நோய்க்கு நிதானம் வெளிப்படுமே; இது கைகண்ட உபாயமாயிற்றே!' என்று சொல்ல, அவ்வளவிலே ஒரு குறத்தி தானாகவே வந்து சேர்ந்து தைவாவிஷ்டையாகி ஒரு சிறு முறத்திலிருந்து சில நெற்களை யெடுத்துக் குறி பார்த்து வேர்வையடைந்து விதிர்விதிர்த்து மயிர்க்கூச்செறிந்து கையை மோந்துபார்த்து நாமமாயிரமேத்த நின்ற நாராயணனைச் சிந்தித்து அவனது காளமேகத் திருவுருவையும் வலங்கையாழி யிடங்கைச்சங்கையும், தோளிணைமேலும் நன் மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையும் அபிநயித்துக்காட்டி, பிறகு வாய்திறந்து "அம்மனைமீர்! நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டா; ஏதோவொரு புதுத்தெய்வம் உங்கள் பெண்ணைத்தீண்டி நோய் சிறிதும் செய்யவில்லை; நோய்செய்த தெய்வத்தை நானறிந்தேன்; உங்கட்குந் தெரியச் சொல்லுகிறேன் கேளுங்கள்;

இவ்வுலகத்தை அளந்தவனும், இலங்கையைப் பாழ்படுத்தினவனும், குன்றமெடுத்துக் கல்மழை காத்தவனும், அமரர் அமுத முண்ணக் கடல் கடைந்தவனும் எவனோ அவன் ஊரிலுள்ள பசுக்களை யெல்லாம் மேய்த்தும் உலகங்களையெல்லாம் பிரளயங் கொள்ளாதபடி ஒருகால் திருவயிற்றிலே வைத்து நோக்கியும் பின்பு வெளியிட்டும் இத்தனை செய்தும் திருப்திபெருதவனுய் இன்னும் தனது குணங்களை விளங்கச்செய்யவேண்டித் திருவாய்ப்பாடியிலே வெண்ணெய் களவு கண்டு அக் குற்றத்திற்காகக் கண்ணிக்குறுங்கயிற்ருல் உரலோடே கட்டுண்டவனுயும், காளிய நாகத்தின் கொழுப்பை யடக்கினவனுயும்; சூர்ப்பணகையின் காதையும் மூக்கையும் அறுத்து அவளது தமையனுன கரனைப் போர்க்களத்திலே (இனி இவன் நரகவேதனை அனுபவிக்க வேண்டா என்னும்படியாக கோரமான வேதனைகளை அநுபவிக்கச் செய்து) நரகவேதனை யனுபவிக்க பங்கப்படுத்திக்கொன் ெருழித்தவனுயும், பிராட்டிக்காக இராவணனது தலைகளை யறுத்தொழித்தவனுயும், நரசிங்கவுருக்கொண்டு இரணியனுடலைப் பிளந்தவனுயும், மாவலி கையில் நீரேற்று மூவுலகளந்தவனுயும், கூர்மருபியாக மந்தரகிரியைத்தாங்கி வாசுகியினுல் கடலைக் கடைந்தவனுயும், திருத்துழாய் மாலையை அணிந்துள்ளவனுயும், ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு முதலையால் நேர்ந்த இடரைக் களைந்தவனுயும், ஆயிரந்திருநாமமுடையனுயும் ப்ரஸித்தனுயிரா நின்ருனன்ருே; அப்பெருமான்தான் உங்கள் பெண்ணை இப்பாடுபடுத்தினவன்" என்று கூறினள்;

அங்ஙன் சொல்லக்கேட்ட என் தாய் 'அம்மா! வேறு தேவதாந்தரமொன்று மன்றே இந்நோய் செய்தது; அவ்வெம்பெருமான்தானே; அவனேயாகில் தன்னடியாளான இவளுக்குத் திருத்துழாய்ப் பிரசாதம் தந்தருளாதொழிவனே; தநதே தீருவன்' என்று சொல்லிவிட்டு விசாரமற்று ஸ்வகார்ய பரையாயொழிந்தாள்;

அவன் குடக்கூத்தாடும்போது அவனது காரார்ந்த திருமேனியைக் கண்ணுற்கண்டது முதல் நான் நிலைதடுமாறி வாய்பிதற்றி விகாரமுற்றேன்; இந்நிலைமையிலே வாடை தானும் வந்து வீசி விரஹத்தால் மெலிந்து கிடக்குமென்னுடலைத் துன்பப்படுத்துந் திறம்சொல்லி முடியாது; கையிலே பனைமடலைக்கொண்டு தெருவேறப்புறப்படத் துணிவுடையேனயினும் யாரேனுஞ் சிலர் நிறக்கேடானவார்த்தைகளைச் சொல்லிப்பழிப்பர்களே யென்றிட்டு அங்ஙனம் புறப்படாது வாளாவிருந்திட்டேன்;

இனி அவனுக்குத் தூது விடுவோமென்று பார்த்து வேருெரு அநுகூலரையுங் காணுமையாலே நெஞ்சுதன்னையே அழைத்து 'நெஞ்சே! நீ எனக்காக மணிவண்ணன் பக்கலிலே சென்று திருத்துழாய்ப் பிரசாதம் கேள்; தருகிறேன் தரமாட்டேன் என்பதில் ஏதாவது ஒரு பதில் வார்த்தையை அவன் சொல்லும்படி நான் சொல்லியனுப்புகிற சொல்லை அயலாருடைய காதில் படாதபடி ரஹஸ்யமாக நீ சொல்லி; அதுகேட்டு அவன் அன்புதோற்ற விசாரித்தாலும் சரி; அந்த சங்கதியே நமக்குத் தெரியாதென்று திரஸ்கரித்தாலும் சரி; ஏதோ ஒரு பதிலைத் தெரிந்து கொண்டு அவ்விடத்தில் தாமதித்து நில்லாமல் கடுகவந்து சேர்ந்திடு' என்று சொல்லிப் போகவிட்டேன். போன அந்நெஞ்சு என்னை மறந்து அக் கடல்வண்ணனிடத்தே ஆழ்ந்தொழிந்தது. என்னிடத்துப் பொருமையுடையரான ஊரா

ருடைய எண்ணமே பலித்ததாயிற்று. என் நெஞ்சமே எனக்கு உதவாதிருக்க வேறு யார் எனக்குத் துணை புரிவார்? என்னைப்பற்றிக் கவலை கொள்வாரே கிடையாது. நெருப்பினருகில் வைத்த மெழுகுபோலே இற்றுப் போகாநின்றது என் ஆத்மவஸ்து. ஊரெல்லாம் துஞ்சினாலும் இக்கண்கள் உறங்குகின்றில. அவனை மறந்தாகிலும் பிழைக்கலாமே. நான் அப்படி மறக்கவும் மாட்டாதே அவனது நாமங்களையே வாய்வெருவிக்கொண்டிராநின்றேன்.

"நாயகன் தானேவந்து சேருகிறான்; சிறிது ஆறியிருக்கவேண்டாவோ? இப்படியும் பதறலாமோ?'' என்கிறீர்களோ? நன்று சொன்னீர்கள்! கடல் போல வளர்ந்த காமத்தை யுடையவர்கள் நன்மை தீமைகளை யுணர்ந்து அடங்கியிருக்கக் கடவர்களோ? வாஸவதத்தை யென்று ப்ரஸித்தையான ஒருத்தி தனது தோழிமார்களையெல்லாம் விட்டொழிந்து விலங்கிட்டிருந்த வத்ஸராஜன் பின்னே தெருவேறப் புறப்பட்டுப்போனாளே, அவளை இகழ்ந்தார் ஆரேனுமுண்டோ? அவளைப் போன்ற துணிவு உடையளான எனக்கு இத்துணிவுக்கு ப்ரதி சோடியாக ஸ்வரூப சிக்ஷை பண்ணுகிறவர்கள் எனக்குத்தலைவரல்லர்; அவர்களது சொல்லை நான் பேணமாட்டேன்: பின்னை என் செய்வேனென்றால்,

நான் அவனுடைய காளமேகத் திருவுருவைக் கண்டுகளிக்கும் வரையில் ஊரூராகப்போய் சிறந்த திருவேங்கடமலை, திருக்கோவலூர், மதிள்சூழ்ந்த காஞ்சீநகரத்திலுள்ள ஊரகம், அப்பக்குடத்தான் ஸந்நிதி, சலியாமற் கிடந்த மருத மரங்களை முறித்த பெருமாள் எழுந்தருளியிருக்கிற திருவெள்ளறை, திருவெஃகா, பெரிய திருவாலி நகர், திருத்தண்கால், திருநறையூர், குட்டநாட்டுத் திருப்புலியூர், அழகிய தோட்டங்கள் சூழ்ந்த திருவரங்கம். திருக்கண்ண மங்கை, நீலமணி வண்ணனை கண்ணபிரானது திவ்யதேசமாகிய திருவிண்ணகர், அழகிய திருக்கண்ணபுரம், திருச்சேறை, தேரழுந்தூர் ச்ரப ஹரமான திருக்குடந்தை, கடிகைத் தடங்குன்று (அதாவது சோளஸிம்ஹபுரம்) திருக்கடல்மல்லை; அழகிய சோலைகள் சூழ்ந்த திருவிடவெந்தை, திருநீர்மலை, அழகிய திருமாலிருஞ்சோலை, திருமோகூர், உலகத்தாரனைவரும் துதிக்கின்ற ஸ்ரீபதரிகாச்ரமம், வடதிசை மதுரை ஆகிய திவ்யதேசங்களா யுள்ளவற்றில் ஓரிடமும் தப்பாமல் எங்கும் புகுந்து

ஒவ்வொரு திருப்பதியிலும் ஒரு மூலையிலிருந்து நால்வரிருவர்க்குச் சொல்லிவிடுகையன்றிக்கே நெடுவீதியேறப் புறப்பட்டு "இங்கே இப்படி குணம் பாராட்டிக் கொண்டு கிடக்கிற மஹாநுபாவனுடைய குணஹாநியை நாட்டாரும் நகரத்தாரும் நன்கு அறியுங்கோள்'' என்று கோஷம்போட்டு மடலூரக் கடவேன்; இப்படி நான் செய்வதற்காக ஊராரெல்லாரும் என்னைச் சிறிதும் இகழாமல் தலைமேல் சுமந்து கொண்டாட வேண்டும்; அப்படி கொண்டாடாதே இகழ்ந்து பழிசொன்னார்களேயாகிலும் நான் மடலூருகை தவிரமாட்டேன் என்று தனது உறுதியை உரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

(பெண்ணை என்று பனைமரத்துக்குப் பெயர்; "வாரார்பூம் பெண்ணைமடல்'' என்று பனைமடலைச் சிறப்பித்துச் சொன்னது 'என்கையிலே சிறந்த ப்ரஹ்மாஸ்த்ரமிருக்கிறபடி பாருங்கள்; இனி எனக்கு என்னகுறை? என் காரியம் கைபுகுந்ததேயாம் என்று தான் பரிக்ரஹித்தஸாதநத்தின் உறைப்பைக் காட்டினபடி.)

---

# பெரிய திருமடலின் கருத்துச் சுருக்கம்

எம்பெருமான் திருவனந்தாழ்வானென்கிற திருப்பள்ளியிலே சயனித்துக் கொண்டு ஸ்ரீ பூமிப்பிராட்டி திருவடி வருடப்பெற்று ஜகத் ஸ்ருஷ்டிக்காக யோக நித்திரை செய்தருளுமளவில், தனது திருநாபிக் கமலத்திலே நான்முகக்கடவுளை ஸ்ருஷ்டிக்க, அப்பிரமன் நான்கு வேதங்களை வெளிப்படுத்தினன். அந்த வேதங்களில்—தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்று நான்கு புருஷார்த்தங்கள் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் மோக்ஷமென்பது சரீரம் முடிந்த பிறகு கிடைக்கக்கூடிய புருஷார்த்தமென்று ஓதப்பட்டுள்ளது. அப்புருஷார்த்தத்தைப்பெற விரும்புமவர்கள் கனிகளையும் இலைகளையும் தின்று தாபஸர்களாய்க் குடிசைகளில் வசித்தும் ஸூர்ய கிரணங்களைப் பக்ஷித்தும் நீர்நிலங்களில் மூழ்கிக் கிடந்தும் இப்படியே பலபல பாடுகள்பட்டு முடிவில் இவ்வுடலை யொழித்து மோக்ஷத்துக்குச் சென்றார்களென்று ஏடுகளில் எழுதி வைத்திருப்பதைப் படிக்கு மித்தனையேயன்றி, 'இன்னான் இன்ன காலத்தில் மோக்ஷமடைய நான் கண்டேன்' என்று மெய்யே கண்டறிந்தார் சொல்லக் கேட்டதேயில்லை. ஆசையாலே மோக்ஷமென்னும் புருஷார்த்தமே பொய்யானது. அது மெய்யே உண்டென்னில்; 'ஸூர்ய மண்டலத்தைப் பிளந்துகொண்டு ஸூக்ஷ்மமான ரந்த்ரத்தின் வழியே போய் மோக்ஷத்தைப் பெற்றுவந்தேன்' என்று வந்தாரொருவரைக் காட்டிச் சொல்லுங்கள்; அங்ஙனே காட்டமாட்டாமல் 'அவன் மோக்ஷமடைந்தான், இவன் மோக்ஷமடைந்தான்' என்று பழம்பாட்டையே பாடிக்கொண்டிருக்கிற அவிவேகிகளுக்கு நாம் என்ன சொல்லுவது!

அந்த மோக்ஷ வார்த்தையை விட்டுத் தொலையுங்கள். மற்ற தர்மார்த்த காமமென்ற மூன்று புருஷார்த்தங்களுள் முதலான தர்மத்தை அநுஷ்டித்த மஹான்கள்—தேவலோகத்திற் சென்று தேவர்களால் கொண்டாடப்பெற்றுச் சீரிய சிங்காசனத்திலே யிருந்துகொண்டு, ஆங்கு அப்ஸரஸ் ஸ்த்ரீகள் சாமரம் வீசிக்கொண்டே அருகே நின்று புன்முறுவல் செய்ய அதனை அநுபவித்தும், அவர்களது கடாக்ஷ வீக்ஷணங்களைப்பெற்று மகிழ்ந்தும், அங்கேயுள்ள அழகிய கற்பகச் சோலைகளிலே அந்த மாதர்களுடனேகூடி விளையாடியும், அலங்காரங்களாற் சிறந்த அழகிய மண்டபத்தில் அம்மாதர்கள் வீணை வாசிக்கக்கேட்டு ஆநந்தித்தும், சிறந்த மாடமாளிகைகளில் அம்மாதர்கள் ஆச்சரியமாக விரித்த படுக்கையின்மேல் படுத்துக்கொண்டு இனிய தென்றற்காற்று வீசப்பெற்று அழகிற்சிறந்த அம்மாதர்களின் ஸம்ச்லேஷத்தைப் பெற்றும் இப்படியாகச் சில போகங்களை அநுபவித்து மகிழ்வார்கள்; இதுவாய்த்து தர்ம புருஷார்த்தத்தாற் பெறும்பேறு.

இரண்டாவதான அர்த்த புருஷார்த்தத்தின் பலனும் இப்படிப்பட்டதேயாம். (ஏனென்றால், அர்த்தமுள்ளவர்களே தர்மமநுஷ்டிப்பவர்களாதலால் தர்மத்தின் பலனாகக் கீழ்ச்சொல்லப்பட்டது தானே அர்த்தத்திற்கும் பரம்பரயா பலனாகத் தேறக்கடவது. ஆக, தர்மம் அர்த்தம் என்ற இரண்டு புருஷார்த்தங்களாலும் (கீழ் விவரித்தபடி) காமபுருஷார்த்தமே பலனாகப் பெறப்படுதலால் காமமே

ப்ரதான சேஷியான புருஷார்த்தமென்றும் அறம் பொருள்கள் அக்காமத்திற்கு சேஷபூதமான புருஷார்த்தங்களென்றும் கொண்டு காமத்தையே நாம் கடைப் பிடித்தோம். அதுதன்னில். ஆபாஸமான காமத்தை யொழித்து ஸ்திரமாயும் ஸ்வரூபாநுரூபமாயுமுள்ள பகவத் காமத்தைப் பற்றினோம். அது கை புகுவதற்காக இப்போது நாம் மடலூரத் துணிந்தோம். 'நாயகனை நோக்கி நாயகியானவள் மடலூரத்தகாது' என்று தமிழர் சொல்லக் கேட்டிருக்கிறோமாகிலும் நாம் இவ் விஷயத்தில் தமிழர்களின் மரியாதையை உதறித்தள்ளுவோமத்தனை; 'ஸ்த்ரீ களுக்கு மடலூருகையே புருஷார்த்தம்' என்று உபபாதிக்கிற ஸ்ரீராமாயணாதிகள் ஸம்ஸ்க்ருத பாஷையில் உள்ளனவாகையால் நாம் அவ்வடநெறியையே பேணி மடலூரக்கடவோம்.

என்னைப்போல காம புருஷார்த்தத்தை விரும்பாதவர்கள் (எப்படிப்பட்ட வர்களென்றால்—) சந்தநத்தின் தன்மையை அறியாதவர்கள்; குழலோசையிலே ஈடு படாதவர்கள்; காளைகளின் கழுத்திலே மணி ஒலிக்க அவ்வொலி கேட்டுச் சுருண்டு விழமாட்டாதவர்கள்; பனைமர்த்தின்மீது வாயலகு கோத்திருக்கின்ற அன்றிற் பறவையின் ஆர்த்த நாதத்தைக்கேட்டு உருகி யிரங்காதவர்கள்; நாயகனையொழிய வும் நிலாவிலே படுக்கவல்லவர்கள்; மன்மதன் தனது புஷ்பபாணங்களைத் தொடுத் துப் பிரயோகிக்கவும் மடலூரப்புறப்படாமல் சலியாதே யிருப்பவர்கள்; தனிக் கிடையிலே தென்றல் வந்து வீசவும் தீக்கதுவினாற்போலே வருந்துதலின்றியே பரம ஸுகமாக உறங்கவல்ல அரஸிக புஞ்ஜங்கள் பின்னையும் ஒருசுற்றுத் தடிக்கட்டும்; நாயக விரஹத்துக்கு வாடாதே வதங்காதே கிடந்து மேன்மேலும் செல்வங்களை அநுபவிக்கட்டும். அப்படிப்பட்ட அரஸிக ஸ்த்ரீகளைப்பற்றி நமக்குக் கவலையில்லை.

நாயகனைப்பிரிந்து தரித்திருக்கமாட்டாதே மடலூருமாபோலே புறப்பட்டுப் பின்சென்று மகிழ்ந்த மஹாநுபாவைகளான மாதர்களில் சிலரைச் சொல்லு கிறேன். கேளுங்கள். தசரத சக்ரவர்த்தியின் வார்த்தையை ஆதரித்துத் திருவபி ஷேகத்தை யொழிந்து ராஜ்யத்தை உபேக்ஷித்து மிகக் கொடிய காட்டிலே இராமபிரான் எழுந்தருள ஸீதாபிராட்டியும்கூட எழுந்தருளவில்லையா? அழகிற் சிறந்த வேகவதி யென்பாளொரு கன்னிகை, தான் தனது காதலனைக் காண வொண்ணாதபடி தமையன் தடுக்கச் செய்தேயும் அதனை லக்ஷ்யம் பண்ணாமல் பதறிச்சென்று போர்க்களத்திலேபோய் நாயகனைப் பற்றிப் பிடித்து நகரத்திலே கொணர்ந்து புணர்ந்தாளன்றோ? உலூபிகை என்கிற நாககன்னிகை அர்ஜு நனைக்கண்டு காமுற்றுத் தனது நகரத்திற்கு அவனை யழைத்துக்கொண்டு சென்று அநுபவித்து மகிழவில்லையா? மஹாபாரதத்திலுள்ள இக்கதையை நீங்கள் கேட்டதில்லையா? இன்னமும், பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷை யென்பவள் சித்ரலேகை யென்னும் தன் தோழி மூலமாக அநிருத்தாழ்வானை வரவழைத்துக்கொண்டு ரமிக்கவில்லையா? உங்களுக்கு நான் எத்தனை த்ருஷ் டாந்தங் காட்டுவேன்? பார்வதியானவள் ஊன்வாடவுண்ணாது உயிர் காவலிட்டு உடலிற்பிரியாப் புலனைந்தும் நொந்து தான் வாடவாடத் தவஞ்செய்து பரம சிவனைப் பெற்று மகிழ்ந்தாளென்கிற கதை உங்களுக்குத் தெரியாதா? இவ்வள வும் நான் சுருங்கச்சொன்னேன்; விஸ்தரித்துச் சொல்ல வ்யாஸபராசராதிகளே வல்லவர். இந்தப் பழங்கதைகள் கிடக்கட்டும்.

யானுற்றநோயை யான் சொல்லுகிறேன் கேளுங்கள் ; நான் திருநறையூரெம்பெருமானை ஸேவிக்கச் சென்று ஸந்நிதியுள்ளே புகுந்து பார்த்தேன்; பார்த்தவுடனே அவ்வெம்பெருமானுடைய திருமார்பு திருவதரம் திருவடி திருக்கை திருக்கண் ஆகிய இவ்வவயவங்கள் நீலகிரிமேல் தாமரைக்காடு பூத்தாற்போல் பொலிந்தன; திருவரைநாண் திருத்தோள்வளை திருமகர குண்டலம் ஹாரம் திருவபிஷேகம் ஆகிய திருவாபரணங்கள் டளபளவென்று ப்ரகாசித்தன. அவ்வெம்பெருமான் பக்கத்தில், அன்னம்போன்ற நடையழகும் மான்போன்ற நோக்கழகும் மயில்போன்ற கூந்தலழகும், மின்போல் நுண்ணிய இடையழகும், வேய்போன்ற தோளழகும், செப்புப்போன்ற முலையழகும், கோவை போன்ற வாயழகும், கெண்டைபோன்ற கண்ணழகுமுடையளான பெரிய பிராட்டியார் இளவஞ்சிக் கொடிபோலே நின்றதையுங் கண்டேன்; கண்டதும் அறிவுபோயிற்று; பல விகாரங்களுண்டாயின. இப்படி வருத்தப்படாநின்ற எனக்குக் கடலோசை வந்து மேன்மேலும் ஹிம்ஸையைப் பண்ணுநின்றது; எல்லாருக்கும் இனிதான நிலா எனக்குத் தீ வீசுகின்றது; குளிர்ந்த நிலா சுடும்படியாக ஸங்கல்பித்தவனுரோ அறியேன்.

இவ்வளவேயோ? எல்லார்க்கும் ஆநந்தகரமாக மலயபர்வதத்தினின்றும் வருகின்ற தென்றல் எனக்கு அழலை வீசாநின்றது. பனைமரத்தின்மீது தாமரைத் தண்டாலேசெய்த கூட்டிலிருந்து கொண்டு அன்றிற் பறவையின் பேடை லகுவான ஸ்வரத்தோடே கூவுவதும் என்நெஞ்சை அறுக்கின்றது. என்செய்வேன்? கொடியனை மன்மதனும் தனது கருப்புவில்லை வளைத்து என்னையே இலக்காகக் கொண்டு புஷ்பபாணங்களைப் பிரயோகிக்கின்றுனே, நானிதற்குத் தப்பிப் பிழைக்கும்படி செய்வாராருமில்லையே! எனது தேஹகுணங்களும் ஆத்மகுணங்களும் திருக்கண்ணபுரத்தெம்பெருமானுடைய ஸம்ச்லேஷத்துக்கு உறுப்பாகாவிடில் இவற்றுலென்ன பயன்? ஒருவரும் புகக்கூடாத காட்டிலே மணமிக்க புஷ்பம் புஷ்பித்துக் கமழநின்றுல் ஆர்க்கு என்ன பயன்? எம்பெருமானேடு அணையப்பெருதே வீணுக வளர்ந்து கிடக்கின்ற இம்முலைகள் எப்போதும் கண்ணெதிரே தோன்றி நின்று மார்புக்கும் பாரமாகி வருத்துகின்றனவே! இம்முலைகள் தொலைந்தொழிய மருந்து தருவாருமில்லையே! செவிக்கு இனிதாகக் கேட்கத்தக்க விடை மணிக்குரலும் என் காதுக்குக் கடூரமாயிராநின்றது. இந்தத் துன்பங்களெல்லாம் நீங்கி நான் வாழும் வகை ஏதேனுமுண்டோ? சொல்லீர்.

தென்றல் முதலான இவையெல்லாம் என்மேல் படையெடுக்கும்படி செய்த மஹாநுபாவன் எனக்குத் தெரியாமையில்லை; இவனுகிமுன் திருத்துழாய்மார்வன். சந்திரனுக்குண்டான க்ஷயத்தைப் போக்கிக் காத்தருளினவன்; காளமேகத் திருவுருவன்! காயாம்பூவண்ணன்; கடலில் அணைகட்டி இலங்கை புக்குப் போர்க்களத்திலே இராவணனைக் கொன்றெழித்தவன்; தேவர்களனைவர்க்கும் குலபாதகனயிருந்த ஹிரண்யகசிபுவை நரசிங்க வுருக்கொண்டு தன் மடிமீது போட்டுக் கொண்டு மார்பு கிழிய வதைத்திட்டவன் ; திருவாழி கொண்ட பெருவீரன்; வராஹாவதாரஞ் செய்தருளிப் பூமிப்பிராட்டியை உத்தரித்தவன்; கடல்கடைந்து வானவர்க்கு அமுதளித்தவன்; வாமநரூபியாய் மாவலிபக்கற்சென்று த்ரிவிக்ரமனுகி உலகமெல்லா மளந்தவன்; ஸாக்ஷாத் ச்ரியப்பதியாயுள்ளவன்; நன்கு அறிவேன்.

தாமரைப்பூவில் பிறந்தவளும் மின்போன்ற இடையையுடையளுமான பிராட்டிக்கு நாயகனாய் திருவிண்ணகரிலே பொன்மலைபோல் விளங்குமவனாய் காவேரி நதியானது ரத்னங்களைக்கொண்டு தள்ளுமிடமான அழகிய திருக்குடந்தையிலே யெழுந்தருளியிருக்கிற—யுத்தஸந்நத்தமான காளைபோலச் செருக்குடையனாய் தென் திசையிலுள்ள விலக்ஷணமான திருக்குறுங்குடியிலே சிவந்த பவழமலை போல் விளங்குமவனாய், திருச்சேறையிலே யெழுந்தருளியிருக்கிற பரம உதாரனாய், திருவாலியிலே எனக்குப் பரமபோக்யனாக ஸேவை ஸாதிப்பவனாய், திருவெவ்வுளூரில் பெரியதொரு மலை சாய்ந்தாற்போலே சாய்ந்தருள்பவனாய். திருக்கண்ணமங்கையில் கல்பவ்ருக்ஷம்போல் எழுந்தருளியிருப்பவனாய் மின் போல் விளங்குகின்ற பெரியபிராட்டியாரையுடையனாய், ஸூர்ய சந்திரர்களோ என்னும்படியான திருவாழி திருச்சங்குகளையுடையனாய் திருவெள்ளறையிலே கருங்கல் மயமான ஸந்நிதியினுள்ளே பொன் போல் விளங்குமவனாய், மரகதப்பச்சை போன்றவடிவை யுடையனாய் திருப்புட்குழியிலே எழுந்தருளியிருக்கிற அஸ்மத்ஸ்வாமியான ஸமர புங்கவனாய், திருவரங்கத்தில் நித்யவாஸம் பண்ணுகிறவனாய் நாம் கையாளக்கூடிய நீலமணிபோன்றவனாய் திருவல்லவாழிலே எழுந்தருளியிருக்கிற நப்பின்னை நாயகனாய் திருப்பேர்நகரிலெழுந்தருளியிருக்கிற நித்யஸித்தனாய் என்று மழியாத நீரையுடையகடலிலே பள்ளிகொள்பவனாய் துளைவிடாத ரத்னம்போலே ஜ்வலிப்பவனாய் என்மேல் வ்யாமோஹமுடையனாகி எனது நெஞ்சைவிட்டுப் பிரியாதவனாய் திருவிடவெந்தையிலெழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனாய் திருக்கடல்மல்லையிலே நித்யவாஸம் செய்யும் ஆச்சரியனாய் நித்ய ஸூரிகளுடைய சிரோபூஷணமாக விளங்குமவனாய் திருத்தண்காவில் எழுந்தருளியிருக்கிற மஹாபலசாலியாய் தனது திருவருளுக்கு விஷயமாகாத பிறர் அறிந்து கொள்ள முடியாத ஸ்வரூபத்தையுடையனாய் முத்துப்போன்றவனாய் ஹம்ஸாவதாரஞ் செய்தவனாய் மத்ஸ்யாவதாரஞ் செய்தவனாய் நரஸிம்ஹாவதாரஞ் செய்தவனாய் (அல்லது) ஹயக்ரீவாவதாரஞ் செய்தவனாய் ஸகல வித்யாஸ்வரூபியாய் முன்னொருகால் இவ்வுலகங்களையெல்லாம் திருவயிற்றிலே வைத்து நோக்கின ஸ்வாமியாய் திருக்கோவலூரிடைகழியில் நித்யவாஸம் பண்ணுகிற எங்கள் திருமாலாய் பூதனையானவள் கதறும்படியாக அவளது முலையையுண்ட பிள்ளையாய் ஹம்ஸங்களானவை சேற்று நிலங்களில் இரை தேடும்படியான திருவழுந்தூரில் விளங்கும் சோதியாய் தென்திசையிலுள்ள தில்லைத்திருச்சித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கிற எனது செல்வனாய், மேகங்களானவை பளபளவென்று மின்னிக்கொண்டு சிகரங்களில் ஸஞ்சரிக்கப்பெற்ற திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கிற) நமக்கு ஆச்சர்யகரமான குணசேஷ்டிதங்களை யுடையனாய் ஸர்வேச்வரனாய் திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கிற மணவாளப்பிள்ளையாய் பகைவரைக் கொல்லவல்ல திருவாழியை ஆயுதமாக வுடையனாய் திருக்கோட்டியூரில் விலக்ஷணமான திருமேனியையுடைய நரஸிம்ஹமூர்த்தியாய் திருமெய்யமலையில் இனிதான அம்ருத ப்ரவாஹம்போல் பரம போக்யனாய் திருவிந்தளூரில் பரமகாருணிகனாய் பொருந்திய மதிள்களையுடைய காஞ்சீ நகரத்தில் வேளுக்கையென்கிற தலத்திலுள்ள ஆளழகியசிங்கராய் திருப்பாடகத்தில் நித்யவாஸம் பண்ணுகிற எமது யுவாவாய், திருவெஃகாவில் ஜாகரூகனாகவே யோக நித்திரை செய்பவனாய், திருவூரகத்தில் விலக்ஷணனாய் அட்டபுயகரத்திலுள்ள அஸ்

மத் ஸ்வாமி சிகாமணியாய் எனது நெஞ்சைக் கொள்ளைக்கொண்ட தலைவனாய் தேவாதிராஜனாய் திருமூழிக்களத்தில் விளங்குபவனாய் இப்படிப்பட்டதென்று சொல்லமுடியாதவனாய் திருவாதனூரில் ஸகல காலங்களுக்கும் நிர்வாஹகனை ஸ்வாமியாய் நேற்று இன்று நாளை என்னும் முக்காலத்துக்கும் ப்ரவர்த்தகனாய், திருநீர்மலையி லெழுந்தருளியிருக்கிற சதுர்வேத ஸ்வரூபியாய் திருப்புல்லாணியி லெழுந்தருளி யிருக்கிற உபயவேத ப்ரதிபாத்யனாய் திருநாங்கூரில் மணிமாடக் கோயிலில் நித்யவாஸம் பண்ணுகிற மணவாளப் பிள்ளையாய் நல்ல நீர்சூழ்ந்த தலைச்சங்க நாட்டிலுள்ள நாண் மதியப் பெருமாளாய் நான் வணங்கத்தக்க கண்ண னாய் திருக்கண்ணபுரத் துறைவானாய் திருநறையூர் மணிமாடமென்று ப்ரஸித்த மான ஸந்நிதியில் எழுந்தருளி யிருக்கிற மணவாளனாய் மலையென்று சொல்லத்தக்க தோள்களையுடையயுவாவாயுள்ள ஸர்வேச்வரனை அவ்வவ்விடங்களில் கண்டு ஸேவித்து 'ஸ்வாமிந்! இப்படிதானா என்னைக் கைவிடுவது? விரஹம்தின்ற உடம் பைப் பாரீர்'' என்று என் அவஸ்தையை விண்ணபப்பஞ்செய்வேன்; அது கேட்டுத் திருவுள்ள மிரங்கித் திருமார்போடே என்னை அணைத்துக் கொள்ளா தொழியில், மாதர்களும் வைதிகர்களும் பக்தர்களும் அரசர்களும் திரண்டுகிடக்குமிடங்கள்தோ றும் புகுந்து அவனது ஸமாசாரங்களையெல்லாம் பலரறிய விளப்பரப்படுத்துவேன்.

அவை எவை யென்னில்; இடைச்சேரியில் தயிர் வெண்ணெய் திருடி இடைச் சிகள் கையில் அகப்பட்டுக்கொண்டு உரலோடே கட்டுண்டு ஏங்கி யழுது நின்ற நிலைமை,—தேவேந்திரனுக்கு இட்ட சோற்றை யெல்லாம தானே பெரும்பூத வடிவுகொண்டு வயிறாரத்தின்று நின்ற வெட்கக்கேடு,—சேவகன் என்று பலரும் ஏசுமபடியாகப் பாண்டவர்கட்குத் தூது சென்ற செலவு,—கூத்தாடி யென்று பெண்கள் கூறும்படி குடக்கூத்தாடினமை,—தன்னை யாசைப்பட்டு வந்த சூர்ப்ப ணகையின் காதையும் மூக்கையும் அரிந்துவிட்ட புன்மை,—ஒரு ரிஷியின் பேச்சைக் கேட்டுத் தாடகை யென்ற ஒரு ஸ்த்ரீயைக் கொலை செய்த இறுச்சேவகம்,—இவை போல்வன மற்றும் பல ஸமாசாரங்களையும தெருவிலே எடுத்துவிட்டு நாடு நகரமும் நன்கறிய மடலூர்வேன் காண்மின்—என்று தலைக்கட்டிற்றாயிற்று.

பெரியதிருமடலின் கருத்துச் சுருக்கம் முற்றிற்று.

# ஸ்ரீ கூடலழகர் ஸன்னிதியில் பட்டர்பிரான் பசுந்தமிழ் மகாநாடு

ஸ்ரீ பட்டர்பிரான் பரதத்வ நிர்ணயம்செய்த கூடல்மாநகரில் (மதுரை) ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரும ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிக ஸ்ரீ வைஷ்ணவ ஸபாவின் அக்ராஸனரும் ஸ்ரீ ராமாநுஜ மிஷன் (இந்தியா) துணைத் தலைவருமான ஸ்ரீ உ. வே. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியின் நியமனத்தின்பேரில் திருக் கோட்டியூர் ஸ்தாநீகம் ஸ்ரீ உ. வே. A. வேங்கடாதரி ஐயங்கார் ஸ்வாமியின் எழுப தாவது திருநக்ஷத்ர பூர்த்தியை வ்யாஜமாகக்கொண்டு பட்டர்பிரான் பசுந்தமிழ் மகாநாடு என்ற பெயரில் ஒரு ஸதஸ் ஜனவரி 29, 30 தேதிகளில் வெகு சிறப்பாக நடைபெற்றது. சென்னை மாகாணத்திலிருக்கும் ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் ஸ்ரீ வைஷ்ணவ ப்ரதிநிதிகள் கலந்துகொண்டார்கள். ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீ உ. வே. கோவிந்தராஜ ஐயங்கார், திருநாங்கூர் ப்ர. ப. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி. கோயில் சதாபிஷேகம் ஸ்வாமி, வேளுக்குடி வரதாசாரியர் ஸ்வாமி, மதுரை R. ரங்கராஜ ஐயங்கார். S. V. நரஸிம்ஹாசாரியர், வீரராகவ ஐயங்கார், ஸௌம்ய நாராயணன், பொன்னப்பன். ராமஸ்வாமி ஐயங்கார், கண்ணன் ஐயங்கார் ஆகி

**P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.**

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.



சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503.

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

n-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM Pin Code-631503

**To**

**Sriman / Srimathi**

256. V.T. Thirunarayana Iyengar,
Professor,
35, Devamba Agraharam,
MYSORE.Z







**Edited and Published by P. B. Annangaracharya Swami for Madras Sathgrantha Prakasana Sabha.**

**Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press, Sannidhi Street, Kancheepuram-631503.**